# வைராக்கியம் பெறுவது எப்படி?

" HOW TO GET VAIRAGYA? "




ஸ்ரீ சுவாமி சிவானந்தா

முத்தமிழ்ப்பண்ணை

# வைராக்கியம் பெறுவது எப்படி?

அருளியவர்

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம்

திரு. N.V. கார்த்திகேயன்








வெளியிடுவோர்

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

சுவாமி சிவானந்தா சாலை

இராசிபுரம் P.O. சேலம் மாவட்டம்

1995

விலை] [ரூ. 15.00

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சற்குரு ஸ்ரீசுவாமி சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமஹராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப் பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ்நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

குருதேவ் சிவானந்தா ஆங்கிலத்தில் எழுதிய "How To Get Vairagya" என்ற நூலை திரு. N.V. கார்த்திகேயன் மிக மிக அற்புதமாக தூய எளிய தமிழில் அழகிய முறையில் மொழிபெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் மதுரை 'பிரிண்ட் ஷாப்' நிறுவனத்தினர் டைப்செட் செய்து கொடுத்துள்ளனர். சிவகாசி தி ஓரியண்ட் லித்தோ பிரஸ்ஸார், சிறந்த முறையில் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கிய அன்பர், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீகப் போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம்வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

**சுவாமி சிதானந்தா**

# பொருளடக்கம்

# முன்னுரை

இந்த நூல் மிகவும் அரிதான ஒன்று. என்னுடைய பல நூல்கள், சிற்றேடுகள், சிறு பிரசுரங்கள் மற்றும் பிற எழுத்துகளிலிருந்து தொகுக்கப்பட்டுள்ளதுடன், நூலின் முழுமை கருதி புதிதாகச் சில விஷயங்களும் சேர்க்கப் பட்டுள்ளன. இந்த நூல், 'சந்தோஷம் உள்ளே இருக்கிறது,' 'வைராக்கியம் என்பது என்ன?' 'உலக வாழ்க்கையின் துயரங்கள்', சரீரம், பெண், உலகம், வைராக்கிய சதகத்தின் சாரம், தெய்வீக ஊக்கமளிக்கும் கதைகள் என எட்டு அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

'சந்தோஷம் உள்ளே இருக்கிறது' என்ற அத்தியாயத்தில் அனைத்து மனித முயற்சிகளுக்கும் இயக்கும் நோக்கமான சந்தோஷம் என்பது, உலகின் விரைந்தழியக் கூடிய பொருள்களில் இல்லை; ஒருவனின் அந்தர்யாமியாகிய அல்லது உள்ளிருக்கும் ஆத்மா உயிர் அல்லது பிரம்மத்திலே தான் இருக்கிறது. சிற்றின்ப அனுபவங்களால் நீ பெறும் கண நேர இன்பம்கூட, ஆன்மீகப் பேரின்பத்தில் ஒரு பிரதிபலிப்பே. உண்மையான, நீடித்திருக்கக் கூடிய சந்தோஷத்தை கடவுளிடமிருந்து அல்லது உன் இதய பீடத்தில் ஒளிர்ந்து கொண்டிருக்கும் ஆன்மாவிடமிருந்தே பெற முடியும்.

'வைராக்கியம் என்பது என்ன?' என்ற அத்தியாயத்தில், வைராக்கியம் என்றால் வீட்டை விட்டு வெளியேறிப் போய்விடுவதோ, வாழ்க்கையின் கடமைகளையும் பொறுப்புகளையும் தட்டிக் கழித்து விடுவதோ அல்ல; ஆனால், இது முற்றிலும் உள் நிலை. பல்வேறு ஆடம்பரங்களுக்கும் இடையே இவ்வுலகில் வசித்துக் கொண்டிருக்கும் ஒருவன்கூட அமைதியான ஆன்மாவாக விளங்கலாம் என்று மிகத் தெளிவாகச் சுட்டிக் காட்டியிருக்கிறேன். இந்த அத்தியாயம் வசதி கருதி சிறு சிறு தலைப்புகளின் கீழ் பிரிக்கப்பட்டுள்ளது. அத்தனையும் பயனுள்ளவை; சுவையானவை. தளைகளிலிருந்து விடுபடுவதற்காக ஆசைகளைத் துறக்க வேண்டியதன்

அவசியம், வைராக்கியத்தின் விதங்கள், அதன் பல்வேறு நிலைகள், அதை வளர்ப்பது எப்படி? நிவ்விருத்தி அல்லது துறவு மார்க்கம், வைராக்கியம் எது? வைராக்கியமல்லாதவை யாவை? இன்னும் இது குறித்த பல விஷயங்கள் சிறப்பாக விளக்கப்படுகின்றன.

'உலக வாழ்க்கையின் துயரங்கள்' என்பது பெரிதும் தாக்கத்தை ஏற்படுத்தக் கூடிய மூன்றாவது அத்தியாயத் தலைப்பு, அறியாமையே எல்லாத் துயரங்களுக்கும் காரணம் என்பதை மூளை உணர வேண்டும். இந்த சுய ஞானத்தை எட்டிவிட்டால், வாழ்க்கையின் துயரங்கள் எல்லாம் ஒரு முடிவுக்கு வந்துவிடும். மனைவி, மக்கள், சொத்து எல்லாவற்றையும் ஒருவன் துறக்கலாம்; ஆனால் பெயரையும் புகழையும் துறப்பது மிகவும் அரிதானது; உன்னதமான ஆன்மீக நிலையின்பாற்பட்டது. சுய ஞானத்தை எட்ட இத்தகைய துறவு மிகவும் அத்தியாவசியமானது. ஆசிரமங்கள் கட்டுவதையும் சிஷ்யர்களை உருவாக்கு வதையும் நான் கண்டித்துள்ளேன்; ஏனெனில், இந்தக் காலத்தில் பல நல்ல சாதகர்களுக்கு நேரிடுவது போல, யோகப் பயிற்சிகள் என்ற இலக்கை எட்டுவதில் தோல்வி ஏற்பட இது பிரதான காரணமாகி விடுகிறது.

நான்காவது அத்தியாயம் 'சரீரம்' பற்றிக் கூறுகிறது. சரீரத்தின் மீது பற்று வைத்திருப்பதே துயரங்களுக்கும் தளைகளுக்கும் காரணம். இந்தப் பற்றுதலும்கூட, உண்மை நிலை அறியாததன் காரணத்தால்தான். ஒருவனுக்குத் தன் சரீரத்தின் மேல் பற்று உண்டானால், சிற்றின்பங்கள், இச்சைகள், கோபம், பேராசை, கவலை, ஆவல், இன்னும் எத்தனையோ துயரங்கள் அதன் தொடர்ச்சியாக வரும். இந்த சரீரத்தை மறுப்பதன் மூலம், இதை வேரிலேயே வெட்டியெறிந்து விட்டு, சச்சிதானந்த சொரூபமாகிய உண்மைத் தன்மையை அறிந்துகொண்டால், அனைத்து துயரங்களும் கவலைகளும் ஒரு முடிவுக்கு வரும். ஆக, சரீரத்தை உதவாதது என ஒதுக்கிவிட வேண்டும்.

அடுத்த அத்தியாயம் 'பெண்'ணைப் பற்றிப் பேசுகிறது. ஆண்களின் பார்வையில் எங்கெங்கு பெண்கள்

கண்டிக்கப்படுகிறார்களோ, அங்கெல்லாம் பெண்களின் பார்வையில் ஆண்களும் கண்டனம் செய்யப்படுகிறார்கள் என்பது பொதிந்துள்ளது. மனிதனாகப் பிறந்திருப்பது முற்றிலும் தன்னையறிந்து ஆத்மானுபூதியை எட்டுவதற்கே. இந்தக் காரணத்திற்காகத்தான் இந்த சரீரத்தைக் கொண்டு இந்த உலகில் பிறந்திருக்கிறோம்; இந்த இலக்கை மறந்துவிட்டு, உண்மைப் பாதையிலிருந்து விலகிச் செல்வதானது, ஒரு மனிதனைப் பொருத்தவரை மிகவும் முட்டாள்தனமானது. ஒரு மனிதன், ஒரு பெண்ணுடன் பந்தத்தை ஏற்படுத்திக் கொள்ளும்போது, குழந்தைகளிடம் பற்று ஏற்படுகிறது; பிறகு செல்வத்தின் மீது, தொடர்ந்து இப்படியே நீண்டுகொண்டே போகிறது. ஆக, பிறப்பும் இறப்புமாகிய சக்கரம் எப்போதும் தொடருகிறது. மேலும், பெண்ணிடம் ஆண் கொள்ளும் அன்பும், ஆணிடம் பெண் கொள்ளும் அன்பும் முற்றிலும் சிற்றின்பத்தின்பாற்பட்டதே. இது உண்மையானதல்ல. எனவே, இத்தகைய அன்பைக் கண்டிப்பது நியாயமே.

'உலகம்' என்பது ஆறாவது அத்தியாயத் தலைப்பு. மனிதன் அறியாமை காரணமாகவே தான் வாழும் இந்த உலகை நிரந்தரமான உண்மை என்றும் அதற்கு அப்பால் வேறெதுவும் இல்லை என்றும் நம்புகிறான். எனவே, எல்லாவிதமான சிற்றின்பச் செயல்களிலும், அவற்றிலிருந்து சந்தோஷத்தைப் பெறுவதற்காக, ஈடுபடுகின்றான். இந்த உலகம் அநித்தியமானது; இதற்கும் மேலாக உன்னதமானதொரு சந்தோஷம் இருப்பது; உயர்ந்த பேரானந்தத்தை உணர்வது அவனுக்குத் தெரியுமா? தெரியாது. வஸ்துகளிலிருந்து சந்தோஷத்தைப் பெறும் நோக்கில் அவன், பல கஷ்டங்களை, சித்திரவதைகளை, சோதனைகளைச் சந்திக்கிறான்; அப்படியும் அவற்றிலிருந்து அவன் சிறிதும் சந்தோஷத்தைப் பெறவில்லை. பெயர்களும் வடிவங்களும் கொண்ட இந்த உலகமானது, பொய்யானது, அநித்தியமானது, மறையக் கூடியது; கடவுள் அல்லது ஆன்மா மட்டுமே உண்மையானது; பேரானந்தமானது; ஆன்மாவை உணர்ந்துகொள்ள முயல வேண்டும்; அவன்

விரும்பும் சந்தோஷத்தை அதிலிருந்து பெற வேண்டும் என வாசகர்களுக்கு உணர்த்த முயன்றுள்ளேன்.

அடுத்த அத்தியாயம் - 'வைராக்கிய சதகத்தின் சாரம்'. இந்த அத்தியாயத்தில், பர்த்ருஹரியின் வைராக்கிய சதகத்தின் சாரத்தைச் சுருக்கமாகத் தந்துள்ளேன். யோகம் அல்லது வேதாந்த சம்பந்தமான ஒவ்வொரு நூலையும் பெற இயலாதவர்களுக்கு இது மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

எட்டாவது அத்தியாயமான 'தெய்வீக ஊக்கமளிக்கும் கதைகளில்' வாசகர்களின் மனதில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தக் கூடிய, ஆழமான வைராக்கியத்தை உருவாக்கக் கூடிய பழங்கால இந்தியாவின் மாபெரும் துறவிகளின், யோகிகளின் சில கதைகள் இடம் பெற்றுள்ளன பற்றி இந்த நூலைப் போல, இதுவரையிலும் எத்தகையவொரு நூலும் வெளிவரவில்லை என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை.

இந்த உலகில் அமைதியான வாழ்க்கை நடத்துவதற்குப் பெரும் ஊக்கமளிக்கக் கூடிய முடிவில் ஸ்ரீ சங்கராச்சாரியரின் ப்ரஷ்னோத்ரி நிறைவில் அநுபந்தமாக இணைக்கப்பட்டுள்ளது.

இந்தத் தொகுதியின் மூலம் கிழக்கிலும் மேற்கிலுமுள்ள யோக, வேதாந்த சாதகர்கள் அனைவரும் அளவற்ற பலன் பெற வேண்டும் என்பதே என்னுடைய பிரார்த்தனை.

சுவாமி சிவானந்தா

'ஆனந்த குடில்'
15, செப்டம்பர், 1938

# குரு ஸ்தோத்ரம்

த்யான மூலம் குரு மூர்த்திம்
பூஜா மூலம் குரோர் பதம் ।
மந்த்ர மூலம் குரோர் வாக்யா
மோக்ஷ மூலம் குரோர் க்ருபா ॥

சைதன்யம் சாஸ்வதம் சாந்தம்
வ்யோ மாதீதம் நிரஞ்சனம் ।
நாத பிந்து கலாதீதம்
தஸ்மை ஸ்ரீ குருவே நம ॥

ஓம் நம : சிவானந்தா குருவே
சச்சிதானந்தா மூர்த்தயே ।
நிஷ் ப்ரபஞ்சாய சாந்தய
நிராலம்பாய தேஜஸே ॥

குரு ப்ரம்ஹா குரு விஷ்ணு
குரு தேவோ மஹேஸ்வர :
குரு சாக்ஷாத் பரப்ரம்ஹம்
தஸ்மை ஸ்ரீ குருவே நம :

ப்ரம்மானந்தம் பரம சுகதம்
கேவலம் ஞான மூர்த்திம்
த்வன்தாதீதம் ககன சதர்ஷ்யம்
தத்வ மஸ்யாதி லக்ஷயம்
ஏகம் நித்யம் விமல மசலம்
சர்வதீ சாக்ஷி பூதம்
பாவா தீதம் த்ரிகுண ரஹிதம்
சத் குரும் த்வம் நமா மீ ||

அத்தியாயம் 1

## சந்தோஷம் உள்ளே இருக்கிறது

மனிதன் இன்பத்தை விரும்புகிறான். அவன் துன்பத்தை வெறுக்கிறான். தான் விரும்புகிற இன்பத்தை விஷய வஸ்துகளிலிருந்து பெறுவதற்காக அவன் படாதபாடுபடுகிறான். பாவம்! மாயையின், விடுவித்துக் கொள்ள முடியாத வலையில் அகப்பட்டுக் கொள்கிறான், பரிதாபகரமான மனிதன்! இடத்தாலும் காலத்தாலும் கட்டுப்பட்ட இந்த வஸ்துகள் நிலையில்லாதவை, அழியக் கூடியவை என்று அவனுககுத் தெரியாது. மேலும் அவற்றிலிருந்து தான் நாடிய சந்தோஷத்தைப் பெறுவதில்லை.

இந்த உலகம் பூரணமானதல்ல. (அபூர்ண). வாழ்க்கை அநித்தியமானது. உயர் நீதிமன்ற நீதிபதியொருவர் டெலிபோனில் பேசிவிட்டு சாப்பிடுவதற்காக மாடிப் படி ஏறுகிறார். என்ன பரிதாபம்! ஏறும்போது மாடிப் படிகளின் மேல் இறந்து போகிறார். இதைப் போன்ற சம்பவங்கள் அசாதாரணமல்ல.

வஸ்துகளில் ஒரு சிறிதுகூட இன்பம் கிடையாது. ஏனெனில் அவை உயிரில்லாதவை (ஜடம்). இந்திரிய இன்பம்கூட ஆன்மீக ஆனந்தத்தின் பிரதிபலிப்பே. எவ்விதம் வறண்ட எலும்பைக் கடிப்பதன் மூலம் தன் வாயிலிருந்து வரும் இரத்தத்தை நாயானது அந்த எலும்பிலிருந்து வருகிறது என்று புத்தியின்மையால் தவறாகக் நினைக்கிறதோ, அதேபோல் லௌகிக புத்தியுள்ள மக்கள் தாங்கள் தினசரி வாழ்க்கையில்

அடையும் இன்பங்கள் வஸ்துகளிலிருந்து வருகின்றன என்று அறிவின்மையால் நினைக்கிறார்கள்.

உன்னுடைய இதய குகையில் தேஜோமயமாகப் பிரகாசிக்கும் ஆன்மாவில் மட்டும் நீ அழியாத, அளவு கடந்த, உன்னதமான ஆனந்தத்தையும் சாந்தத்தையும் காண முடியும். ஆன்மா, ஆனந்தமே வடிவமானது.

மன சஞ்சலம், அதிருப்தி, அமைதியின்மை, இவை அரசர், கோடீசுவரர் எல்லோரிடத்தும் காணப்படுகிறது. உலக இன்பங்களின் உச்சியில் இருக்கும்பொழுதுகூட ஏதாவது ஒருவிதமான துன்பம், கஷ்டம் அல்லது வருத்தம் இல்லாமலிருப்பதில்லை. முற்றிலும் சந்தோஷமாயுள்ள ஒரு மனிதனை எனக்குக் காட்டுங்கள். அவனுடைய இரண்டாவது மகனுடைய திருமண வைபவம் கொண்டாடப்படும்பொழுது கொஞ்ச காலத்திற்கு முன் இறந்துபோன முதல் மகனின் எண்ணங்கள் அவன் மனதைத் துன்புறுத்துகின்றன. இதயம் இடைவிடாது சுருங்கி விரிவது போல், இன்ப துன்பங்களின் எழுச்சிகள் இடைவிடாது இருந்துகொண்டே இருக்கும்படி மனம் ஆக்கப்பட்டிருக்கிறது. நீ இன்பத்தின் சூழ்நிலையில் இருக்கும்போது, அவை போய்விடுமோ என்ற பயம் உன் மனதில் ஏற்படுகிறது. இது இன்பத்திற்கு மேல் துன்பத்தைக் கொடுக்கிறது. எப்படியாவது அந்தத் துன்பத்தை நீக்கினாலும் அது மறுபடியும் வியாதி, இறப்பு அல்லது இன்னும் வேறு ஏதாவது ஒருவிதத்தில் தலைகாட்டுகிறது.

செல்வத்தின் மூலமாகவும் அமரத்துவம் அடைய முடியாது. "கிரியைகளாலும் செல்வத்தாலும் மற்ற எதனாலும் அல்ல; ஆனால் தியாகத்தால் மட்டும்தான்

அமரத்துவம் அடைய முடியும்" என்று உபநிடதங்கள் ஆணித்தரமாகக் கூறுகின்றன.

வெறும் வஸ்துகளை விட்டுவிடுதல் மட்டும் உண்மையான தியாகம் ஆகாது. இதை நன்றாகக் கவனத்தில் வைத்துக் கொள்ளுங்கள். 'நான்', 'என்னுடையது' என்னும் அகப்பற்று, மோகம், தேகப்பற்று, ஆசை முதலிய எல்லாப் பற்றுகளையும் விடுவதே உண்மையான தியாகமாகும்.

எல்லாப் பிறவிகளிலும் கிடைப்பதற்கரியது மானிடப் பிறவி, அதிலும் அரிது ஆண் சரீரம். மனிதப் பிறவி, அமரத்துவம் அடைய ஆசை, பூரணமடைந்த சாதுவின் மேற்பார்வை - இவை மூன்றும் கிடைப்பதற்கரியன என்றும், கடவுள் கிருபையால் கிடைக்கின்றன என்றும் சொல்லப்படுகிறது. முற்பிறவிகளின் நல்வினை காரணமாக நல்ல புத்தியோடு கூடிய ஆண் சரீரம் பெறும் ஒரு மனிதன், அறியாமையால் தன் ஆத்மானுபூதிக்கு முயலாவிட்டால், அவன் தற்கொலை செய்துகொண்டவனாகிறான். ஏனெனில் அநித்திய மான வஸ்துகளைப் பற்றிக் கொண்டே அவன் தன் முடிவை அடைகிறான்.

"நான் ஏன் ஆன்மாவை உணர வேண்டும்?" என்ற நல்ல கேள்வியை நீ இப்பொழுது கேட்கலாம். ஆத்மானுபூதி, இறப்பு பிறப்பாகிய சம்சார சக்கரத்திலிருந்தும் அதனுடன் கூடிய துன்பங்களிலிருந்தும் உன்னை விடுவிக்கிறது. உபநிடதத்தின் அழுத்தமான முடிவைக் கேள். "பாவத்தால் தீண்டப்படாததும், அழிவில்லாததும், துன்பம், பசி, தாகம் ஆகியவற்றிலிருந்து நீங்கியதும்,

நல்ல எண்ணங்களும் நல்ல தீர்மானங்களோடும் கூடியதுமாகிய இந்த ஆன்மாவே நாடி அடைவதற்குத் தகுதியானது. ஒருவன் தெரிந்துகொள்ள வேண்டியதும் அதுவே. எவன் அந்த ஆத்மாவை நாடிச்சென்று தெரிந்து கொள்கிறானோ, அவன் எல்லா உலகங்களையும் ஆசைகளையும் அடைகிறான்." (சாந். உபநிடதம்).

சாந்தோக்கிய உபநிடதத்தின் சொற்களை மறுபடியும் கேள். அந்த அழியாதது (பெரியது) ஆனந்தமயமானது. சிறியது (அழியக்கூடியது) அதில் ஆனந்தமே கிடையாது. ஆகையால் ஒருவன் அந்த அழியாததை அறிய ஆசைப்பட வேண்டும்.

இந்த உலகத்தில் உள்ள ஒவ்வொரு மனிதனும் அமைதியற்று, திருப்தியற்று, சந்தோஷமற்று இருக்கிறான். தனக்கு ஏதோ ஒன்று வேண்டுமென்று அவன் உணர்கிறான். ஆனால் அதன் தன்மை எப்படிப்பட்டது என்று அவனுக்குத் தெரிவதில்லை. தான் விரும்பும் சாந்தத்தையும் அமைதியையும் பெற எத்தனையோ வழிகளில் முயலுகிறான். ஆனால் அவன் அடையும் புகழும் பெருமையும் தான் எதிர்பார்த்ததற்கு மாறாக வெறும் தோற்றம், உண்மையில்லாதவை என்று உணர்கிறான். அவற்றில் அவனுக்கு ஒருவித சந்தோஷமும் கிடைப்பதில்லை. பொய்யான இந்தப் பட்டங்கள், பத்திரங்கள், பெயர், புகழ், மரியாதை - இவற்றைப் பெறுகிறான். மணம் செய்து கொள்கிறான். அழகான குழந்தைகளைப் பெறுகிறான். சுருங்கச் சொன்னால் எவற்றைப் பெற்றால் சந்தோஷம் அடையலாம் என்று நினைத்தானோ அவற்றை எல்லாம் பெறுகிறான்.

ஆனால், அவன் உண்மையான அமைதியும் சாந்தமும் பெறுவதில்லை.

இதயக்குகையிலே என்றைக்கும் அழியாத ஜோதியோடு பிரகாசித்துக் கொண்டிருக்கும் நமது கூட்டாளியாகிய ஆன்மாவை மறந்திருப்பதே, ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் அனுபவிக்கும் இந்தவிதமான மன நிம்மதியின்மை, திருப்தியின்மை, சுகமின்மை போன்ற கஷ்டங்களுக்குக் காரணம் என்று அவ்வப்பொழுது தோன்றும் சாதுக்கள், மகா புருஷர்கள், ஆச்சாரியார்கள், அவதார புருஷர்கள் இடைவிடாது கூறுகிறார்கள்.

நீ உண்மையான ஆன்மீக ஆவலோடு அவனைப் பார்க்க விரும்பினால், அவன் உன்னை அன்போடு அணைத்துக் கொள்ள நீட்டிய கரங்களுடன் எப்பொழுதும் தயாராக இருக்கிறான்.

சிறிது இன்பம், மிகவும் அதிக துன்பத்தோடு கலந்திருக்கிறது. ஓர் அணா இன்பம், பதினைந்து அணா துன்பத்தோடு கலந்திருக்கிறது. துன்பம், பயம், கவலை ஆகியவற்றோடு கூடிய இன்பம், இன்பமே ஆகாது. இந்த ஓர் அணா இன்பத்தையும் நீ நன்றாக ஆராய ஆரம்பித்தால் அதிலும்கூட உண்மையான இன்பம் இல்லை என்று தெரியவரும். இது வெறும் மனதின் மயக்கம், கற்பனை என்று உனக்குத் தெரிய வரும். ஏ மனிதா! விழித்துக் கொள். உன் கண்களை நன்றாகத் திறந்துகொள். விவேகத்தை (பகுத்தறிவு) வளர்த்துக் கொள். நீ அநித்திய வஸ்துகளிலிருந்து உண்மையான இன்பத்தைப் பெற முடியாது.

அந்தர்யாமியாகிய அல்லது உள்ளிருக்கும் ஆன்மா, உயிர் அல்லது பிரம்மத்திலேதான் 'வஸ்து சம்பந்தமில்லாத' நிரந்தரமான, அழியாத, அளவிட முடியாத ஆனந்தத்தைப் பெற முடியும். ஆகையால், சிறிதும் தயக்கமின்றி, மற்ற எல்லா வெளி வஸ்துகளையும் வெறுத்துவிட்டு பகவானுடைய பாதங்களைப் பற்றிக் கொள். வைராக்கியத்தை வளர்த்துக் கொள். வைராக்கியம் ஆன்மீகப் பாதையின் திடமான அசைக்க முடியாத அடித்தளம்.

மனிதர்கள் ஏன் இந்திரிய இன்பத்தை நாடி அலைகிறார்கள்? இன்பத்தைப் பற்றிய அவர்களுடைய எண்ணம் என்ன? சம்ஸ்காரங்கள், அதே இந்திரிய போகக் காரியங்களை மறுபடியும் மறுபடியும் செய்யத் தூண்டுகின்றனவா என்ன? கேவலம், சூழ்நிலைக்கும் சந்தர்ப்பங்களுக்கும் உட்பட்ட ஒரு ஜந்துவா, மனிதன்? தகுந்த பயனளிக்கக் கூடிய வழிகளால் அவன் பழைய சம்ஸ்காரங்களை மாற்றிக் கொள்ள முடியாதா என்ன?

அறியாமை காரணமாக வஸ்துகளில் இன்பத்தைத் தேடி இங்குமங்கும் அலைகிறான் மனிதன். ஒரு சிறிய ரொட்டித் துண்டு, கொஞ்சம் இனிப்பான ஆகாரம், ஓர் இளம் மனைவி, ஒரு மகன், கொஞ்சம் பதவி, சக்தி, பகட்டிற்கு பாங்கில் கொஞ்சம் பணம் - இவை அவனுடைய மனதை இன்பமயமாக்கி, சாந்தமடை விக்கின்றன. அவன் வேண்டுவது இவை தான். ஆன்மீக ஆனந்தம், இந்திரிய சம்பந்தமற்ற ஆனந்தம், அமைதி, ஆன்மீகப் புளகாங்கிதம், ஆன்மீக ஞானம் - இவை அவனுக்குத் தெரியாதவை. அவன் இவற்றை வேண்டுவதில்லை. அதோடு மட்டுமல்ல, அவன் இவற்றை வெறுக்கிறான். உன்னதமான, மேன்மையான

பொருள்களைப் பற்றிப் பேசும் மனிதர்களையும் அவன் வெறுக்கிறான். புருஷார்த்தத்தால் அல்லது தீவிர முயற்சியால் மனிதன் தன் பழைய சம்ஸ்காரங் களை மாற்ற முடியும். இதை நம்பு. அவன் கேவலம், சந்தர்ப்பத்திற்கும் சூழ்நிலைக்கும் அடங்கியவனல்ல. தன்னுடைய முடிவிற்கு அவனே தலைவன்.

இத்தகைய சஞ்சலமான சிக்கல்களையுடைய உலக வாழ்க்கையில், அமைதியும் சாந்தமும் உடைய சில நேரம் வருகிறது. எவ்வளவு சிறிய நேரமாக இருந்தாலும், தாற்காலிகமாக மனம், இந்த அசுத்தமான உலகியல் விஷயங்களுக்கு மேல் சென்று, "வாழ்க்கை எங்கிருந்து வந்தது? எதற்காக இருக்கிறது? இவ்வுலகத்தின் இரகசியம் என்ன?" என்பன போன்ற வாழ்க்கையின் உன்னதமான சில கேள்விகளைக் கேட்கிறது. பிறகு மனிதன் "நான் யார்?" என்று மேலும் ஆழ்ந்து யோசிக்கிறான். தீவிரமாக மேற்கொண்டு ஆலோசித்து உண்மையாக ஆராய்பவர்கள் அவ்வெண்ணங்களில் மூழ்கி விடுகிறார்கள். அவன் மேலும் ஆராய்ந்து உண்மையை அறிய ஆரம்பிக்கிறான். அவனுக்குப் பகுத்தறிவு உதயமாகிறது. அவன் வைராக்கியம், தாரணை, தியானம், உடல் தூய்மை, மனத் தூய்மை இவற்றின் துணைகொண்டு கடைசியாக உன்னதமான ஆத்ம ஞானத்தைப் பெறுகிறான். ஆனால் உலகியல் ஆசைகளும் பற்றும் நன்றாகப் படிந்திருக்கும் மனமுள்ளவன், இவையாவற்றிலும் கவலையற்றவனாக, ராகத் துவேஷ (விருப்பு வெறுப்பு)ங்களாகிய இரண்டு வேகங்களால் இங்குமங்கும் இழுத்துச் செல்லப்பட்டு மறுபடியும் மறுபடியும் உலக விஷயங்களிலேயே

உழன்று கடைசியாக சம்சார சாகரத்தில் தள்ளப்படுகிறான்.

என்ன ஆச்சரியம்! இவ்வுலகத்தில் எவ்வளவு அநித்தியமானது இந்த இந்திரிய வாழ்க்கை. விஷய போகங்களின் நிலையின்மையையும் அத்துடன் கூடிய துன்பம், கவலை, கஷ்டம், வருத்தம், அகால மரணம் - இவற்றை இடைவிடாது சிந்தித்துப் பார்த்தால், வைராக்கியம் சிறிது சிறிதாக வளர ஆரம்பிக்கும். மனைவி, மக்கள், நண்பர்கள் அல்லது சொத்து இவற்றின் பிரிவால் ஏற்படுவது தாற்காலிக வைராக்கியம். இது உன் ஆன்மீகப் பாதையில் அதிக உபயோகமாக இருக்காது. உண்மையாக வேண்டுவது என்னவென்றால், விவேகம் அல்லது பகுத்தறிவால் உண்டான நிரந்தர வைராக்கியமே.

எப்படி வெளிச்சத்தின் முன் இருள் இருக்க முடியாதோ அதேபோல் இந்திரிய இன்பத்தோடு ஆன்மீக ஆனந்தம் இருக்க முடியாது. ஆகையால் உலக வஸ்துகளிடத்தில் தீவிர வெறுப்பை ஏற்படுத்திக் கொள். எல்லா ஆசைகளையும் அறவே ஒழி. இந்திரிய வஸ்துகளிலிருந்து மனதைத் திருப்பு. பிறகு உன்னிடம் வைராக்கியம் வளரும்.

உன் வாழ்க்கையை, சிக்கல்கள் உடையதாயும், கடினமானதாயும் நீயே செய்து கொண்டிருக்கிறாய். இந்த சம்சார சகதியில் நீயே அகப்பட்டுக் கொண்டாய். நீ உன் பந்தங்களைத் தினந்தோறும் அதிகப்படுத்திக் கொள்கிறாய். எளிமையான வாழ்க்கை மறைந்துவிட்டது. அநாவசியமான பழக்கங்களும், நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படுகின்றன. எங்கும் வேலையின்மை இருப்பது ஓர் அதிசயமல்ல. மக்கள்

பஞ்சத்தால் மடிகின்றனர். வியாபாரத்தில் மந்தம் ஏற்படுகிறது. எங்கும் ஒரே நிம்மதியின்மை. பூகம்பத்தால் சர்வநாசம் ஏற்படுகிறது. மண விலக்கு நீதிமன்றங்கள் அதிகரிக்கின்றன. ஒரு தேசம் மற்றொரு தேசத்திற்கு பயப்படுகிறது. மற்ற தேசங்கள் பெரிய யுத்தத்திற்கு ஆயத்தம் செய்வதாக ஒவ்வொரு தேசமும் சந்தேகிக்கிறது. இப்படியாக வாழ்க்கை மிகவும் நிச்சயமற்றதாகப் போய்விட்டது. வாழ்க்கையில் பயம், கொடூரம், குழப்பம் ஆகியவையே நிறைந்துவிட்டன. வாழ்க்கை மிகவும் பயங்கரமாகப் போய்விட்டது. நாலா பக்கங்களிலிருந்தும் பயங்கரப் புயல் வீசுகிறது.

இவ்விதக் கஷ்டங்களிலிருந்தும் துன்பங்களி லிருந்தும் தப்புவதற்கு வழியே கிடையாதா? ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. பற்றற்ற, தன்னடக்கமுள்ள, தூய்மையான, அன்போடு கூடிய, சுயநலமற்ற சேவை செய்யும் வாழ்க்கையை மேற்கொள். நேர்மையான வாழ்க்கையை நடத்து. நேர்மையாகப் பழக, யோசிக்க, நினைக்க, நடக்க, பழகிக் கொள். நேர்மையான மனோபாவத்தைப் பெறு. பக்தியும் தியானமும் பழகிக் கொள். அதுவே எல்லாத் துன்பங்களுக்கும் நிவாரணம் தரும்.

மோகன்! உன்னிடம் உண்மையான நிரந்தர வைராக்கியம் இல்லை. உன்னுடைய தற்போதைய மனோநிலை சில கஷ்டங்களால் உண்டானது. இது உன் ஆன்மீகப் பாதைக்கு உபயோகப்படாது. மனம் தயாராக காத்துக் கொண்டிருக்கும். முதல் சந்தர்ப்பம் கிடைக்க வேண்டியதுதான் தாமதம், தான் விட்ட வஸ்துகளை மறுபடியும் பற்றிக் கொள்ளும். நீ ஆன்மீக சம்ஸ்காரங்கள் பெற்றவன் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் உன் வைராக்கியம் நித்திய, அநித்திய வஸ்துகளை ஆராய்ந்து அதிலிருந்து வரும் தூய்மையான பகுத்தறிவிலிருந்து பிறந்ததாக இருக்க வேண்டும். இது மிகவும் கிடைப்பதற்கரிய பொருள், பெற முடியாத செல்வம். ஆனால் அனேகர் இதைப் பெற பயப்படுகிறார்கள்.

ஆயிரக்கணக்கான இளம் பட்டதாரிகளும் டாக்டர்களும் கையில் மண் பாத்திரம் ஏந்தி, காவியுடை உடுத்தி உத்தரகாசியிலும் கங்கோத்திரியிலும் ஆழ்ந்த தியானமும் பிராணாயாமமும் செய்வதற்காக என்னிடம் வருகிறார்கள். சில இளம் ஆராய்ச்சி மாணவர்களும் ராஜகுமாரர்களும் அழகான பட்டு 'சூட்'டும் 'டை'யும் கட்டிக் கொண்டு கல்யாணத்திற்காகப் பெண் தேடிக்கொண்டு பஞ்சாபிற்கும் காஷ்மீரத்திற்கும் செல்கிறார்கள். இவ்வுலகத்தில் இன்பம் இருக்கிறதா? அல்லது துன்பம் இருக்கிறதா? இன்பம் இருந்தால் படித்த இளம் மனிதர்கள் ஏன் காட்டிற்குப் போகிறார்கள்? துன்பம் இருந்தால் இளம் மனிதர்கள் ஏன் செல்வத்தையும் பெண்களையும் பதவியையும் நாடிச் செல்கிறார்கள்? மாயை விசித்திரமானது. மோகம் விசித்திரமானது.

வாழ்க்கை, உலகம் இவற்றின் இரகசியத்தை அறிந்து கொள்ள முயற்சி செய். பகுத்தறிவைப் பெறு, சத்சங்கத்தை நாடிச் செல். ஆன்மாவின் தன்மையை ஆராய்ந்து பார். விசாரம் செய். யோக வாசிஷ்டம், உபநிடதம் முதலியவற்றைப் படி. பிறகு வாழ்க்கையின் எண்ணற்ற பிரச்சினைகளைப் பற்றிய விவரம் நன்றாகப் புலப்படும். இந்த உலகத்தில் அணு அளவு

கூட சந்தோஷமும் கிடையாது. சந்தோஷத்தை உனக்குள்ளே தேடு.

ஒரு நாடு பெறத் தகுதியற்றதா? காஷ்மீரமோ அல்லது ஓர் அழகான வாசனை கொடுக்கக் கூடிய விதவித நிற புஷ்பங்களையுடைய தோட்டமோ, கோடையில் வசிக்க உகந்த இடமில்லையா? மிருதுவான இடையும் தாமரை போன்ற கண்களும் உடைய இளம் மகாராணிகளின் சகவாசம் வாழ்க்கைக்கு சந்தோஷம் கொடுக்கக் கூடியன அல்லவா? இருந்தும் பர்த்துருஹரி, புத்தர், கோபிசந் போன்ற அறிவுள்ள, பற்றற்றவர்கள் இவற்றை யெல்லாம் உபயோகமற்றவையாக எண்ணி உதறித் தள்ளிவிட்டு அமரத்துவம், அழியாத ஆனந்தம், அமைதி முதலியவற்றைக் கொடுக்கக் கூடிய ஆன்மாவை உணர காட்டிற்குச் சென்றார்கள்.

உயிர் வருகிறது, போகிறது. ஆகையால் நீ மிகவும் ஜாக்கிரதையாக உன்னிடமுள்ள ஆன்மீக சம்ஸ்காரங் களைப் பாதுகாத்து, தீவிர வைராக்கியத்தோடும் அமரத்துவ ஆசையோடும் இடைவிடாத சாதனை செய்து, வளர்க்க வேண்டும். நீ அவற்றைப் பன்மடங்காக்கிக் கொள்ள வேண்டும்.

வைராக்கியம் உண்மையிலே ஓர் உள் மனோநிலை. செல்வம், பெண், சொகுசு முதலிய இடைஞ்சல்களுக்கிடையில் இருக்கும் ஒரு மனிதன் பூர்ண வைராக்கியத்தோடு இருக்க முடியும். அதே நேரத்தில் வெகு தொலைவிலுள்ள இமயமலையின் குகையிலிருக்கும் ஒரு சாது தன்னுடைய கமண்டலம், ஊன்று கோல், கௌபீனம் ஆகியவற்றிடத்தில் அதிகப்பற்றுள்ளவனாக இருக்கலாம்.

அத்தியாயம் 2

## வைராக்கியம் என்பது என்ன?

ஜனக மன்னர் ஒரு நாட்டை அரசாண்டபோதிலும் முற்றிலும் பற்றற்றவராக இருந்தார். அதே போல் ராஜா பகீரதனும் இருந்தான். சுடளை என்னும் ராணியும் ஒரு நாட்டை அரசாண்ட போதிலும் நல்ல வைராக்கியம் பெற்றிருந்தாள். ஆனால் அவன் கணவனும் சாதுவுமாகிய ராஜா சிகித்வஜர் தவமும் யோகமும் பழகக் காட்டிற்குச் சென்றிருந்த போதிலும் தன்னுடைய உடலிலும் கமண்டலத்திலும் மிகவும் பற்றுள்ளவராக இருந்தார்.

கொஞ்ச நேரம் பேசுவதாலோ அல்லது சில நாள்கள் சேர்ந்து இருப்பதாலோ ஒரு சாது அல்லது சந்நியாசி அல்லது குடும்பஸ்தனுடைய மனோ நிலையைப் பற்றியும் வைராக்கியத்தைப் பற்றியும் நீ சரியான தீர்மானத்திற்கு வர முடியாது. நீ ஒருவனுடைய உள் மனோநிலையை அறிந்து கொள்ள அவனுடன் நீண்ட காலத்திற்குப் பழக வேண்டும்.

சாதாரணமாக இவ்விஷயங்களில் அனேகர் மிகவும் பெரிய தவறு செய்கிறார்கள். ஆடையின்றி இருக்கும் ஒரு சாதுவை மிகப் பெரிய மகாத்மா என்று தொடக்கத்தில் எண்ணிவிடுகிறார்கள். ஆனால் நெருங்கிப் பழகுவதன் மூலம் தங்களுடைய எண்ணத்தை மாற்றிக் கொள்ள நேரிடுகிறது. ஆடையின்றி திறந்த உடலோடு இருத்தல் உண்மை வைராக்கியம் ஆகாது. ஆடையின்றி இருக்கும் சாதுவின் மனம் எல்லாவித ஆசைகளாலும்

பற்றுகளாலும் நிறைந்திருக்கக் கூடும். யாருக்குத் தெரியும்! வேண்டுவது என்ன? ஆகையால் திறந்த மனம், அதாவது, வாசனைகள், அகங்காரங்கள் இவற்றை அறவே ஒழித்த மனமே தேவை. வெளித் தோற்றத்தால் ஏமாந்து போகாதீர்கள். ஜாக்கிரதை! ஜாக்கிரதை!! ஜாக்கிரதை!!!

நீ பகுத்தறிவு அல்லது விவேகம் பெற்றிராவிட்டால், ஆத்மானுபூதியடைய தீவிரமாக முயலாவிட்டால், உன் ஆயுட்காலம் முழுவதும் சாப்பிடுவதிலும், குடிப்பதிலும், தூங்குவதிலும், மணம் செய்து கொள்வதிலும் இனத்தைப் பெருக்குவதிலுமே செலவழித்தால், நீ நான்குகால் பிராணிகளை விட எவ்விதத்திலும் உயர்ந்தவனல்ல. நீ அவற்றிடமிருந்து அனேக நல்ல விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும். மிருகங்கள்கூட ஆச்சரியப்படத்தக்க அளவிற்கு, தன்னடக்கம் பெற்றிருக்கின்றன. மனிதனே! உன்னுடைய தன்னடக்கம் எங்கே?

இந்திரியங்களின் மூலம் பெறும் இன்பம், அனேக துன்பங்களோடும் தோஷங்களோடும் கூடியது. அது பாவம், துக்கம், பலஹீனம், பற்று, அடிமை மனப்பான்மை, திடமற்ற மனம், கஷ்டம், துன்பம், தீய பழக்கங்கள், ஆசைகள், அமைதியற்ற மனம் - இவற்றோடு கூடியது. ஆகையால் எல்லாவித இந்திரிய இன்பங்களையும் வெறுத்துவிட்டு, அமைதியில் ஆனந்தம் பெறு.

‘‘கர்ம மார்க்கம், சந்நியாச மார்க்கம் - என்னும் இரண்டு மார்க்கங்கள் கூறப்பட்டுள்ளன. இரண்டாவதாகிய சந்நியாச மார்க்கம் என்பது மூன்றுவிதமான (மகன், செல்வம், புகழ்) ஆசைகளைத்

தியாகம் செய்வதாகும். இவ்விரண்டு மார்க்கங்களில் சந்நியாச மார்க்கமே விரும்பத்தக்கது" என்று நாராயண உபநிடதம் கூறுகிறது. "தியாகம் கண்டிப்பாய் விரும்பத்தக்கது" என்று தைத்ரேய உபநிடதம் கூறுகிறது.

மேம்போக்காக வஸ்துகளை விட்டு விடுதல் பயனற்றது. அது உண்மையான 'வைராக்கியமாகாது, எல்லாவித வாசனைகளையும் தியாகம் செய்து அறியாமையாகிய இதய முடிச்சை அறுத்தலே உண்மையான வைராக்கியம் அல்லது தியாகமாகும்.

**வைராக்கியத்தின் பெருமை**

"நான் அவனைவிட உயர்ந்தவன்; நான் அதைச் செய்தேன், இதைச் செய்தேன், நான் இந்தச் சரீரம்!" என்பது போன்ற பேத புத்தியும், "நான் தான் கர்த்தா" என்று நினைக்கும் கர்த்தவ்விய அபிமானமுமே தியாகம் செய்ய வேண்டியவை. இவற்றைத் தியாகம் செய்ய முடியாவிட்டால், வீடு, மனைவி, மக்களைத் தியாகம் செய்வதில் ஒரு பயனுமில்லை.

உலகப் பொருள்களிலிருந்து எவன் மேம்போக்காக விலகியிருக்கிறானோ, அவனை உண்மையாக இந்த உலகத்தை முற்றிலும் துறந்தவன் என்று மதிக்க முடியாது. ஆனால் உலகத்தில் வாழ்ந்தும்கூட அதனுடைய குற்றங்களையும் குறைகளையும் தோஷங்களையும் கண்டுகொண்டு ஒருவித ஆசையும் இல்லாதவனாக, எதிலும் பற்றற்றவனாக இருக்கிறவன் எவனோ, அவனையே உண்மையாக உலகத்தைத் துறந்தவன் என்று சொல்லலாம். 'யோக வாசிஷ்ட'த்தில் இருக்கும் ராஜா சிகித்வஜருடைய

கதையைப் படியுங்கள். இந்த உண்மையை நீங்கள் நன்றாகப் புரிந்துகொள்வீர்கள்.

இவ்வுலகத்தைத் துற. மோட்சத்தின் மேலுள்ள ஆசையையும் துற. துறவையே துற. பிறகு நீ அவன் ஆவாய். நீ அது ஆவாய்.

அன்பார்ந்த சகோதரனே! உன்னிடத்தில் உண்மையான நிரந்தரமான வைராக்கியம் இல்லாவிட்டால், நீ ஆன்மீகப் பாதையில் ஒருவித முன்னேற்றமும் காண முடியாது. விரிசலடைந்த பானையிலிருந்து நீர் கசிவது போல், உன்னுடைய விரதங்கள், நோன்புகள், சக்தி, தியானம் - இவை வீணாகப் போய் விடும். ஆகையால் ஜாக்கிரதையாக இரு.

இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பற்றுகளையும் வெட்டித்தள்ள வைராக்கியத்தைவிட அதிகக் கூர்மையான சக்தி வாய்ந்த கத்தி வேறு எதுவும் கிடையாது. இக்கத்தியைக் கையில் பிடித்துக்கொண்டு ஆன்மீகப் பாதையில் தைரியமாக நடந்து செல். நீ தடையின்றி சுலபமாக இலக்கைப் போய்ச் சேர்வாய்.

மோகத்தின் நிழல், மூடனுடைய நட்பு, யௌவனத்தின் அழகு, செல்வம் - இவையெல்லாம் அற்ப காலத்திற்கே இருக்கின்றன. இவையெல்லாம் நிலையற்றவை. எனவே, இவற்றைச் சிறிதும் தயக்கமின்றி வெறுத்துத்தள்ளு.

தாகமுள்ளவன் மட்டும்தான் தண்ணீர் குடிக்கிறான். பசியுள்ளவன் மட்டுமே சாப்பிடுகிறான். அதேபோல், ஆன்மீகப் பசியோடும் தாகத்தோடும் இருக்கும்

ஒருவனே, அமரத்துவமாகிய அழியாத அமிர்தத்தைப் பருகுகிறான்.

வேமன்னருடைய வாழ்க்கைச் சரித்திரம் படிக்கத் தகுதியானது. அவர் ஆந்திர தேசத்திலிருந்த ஒரு ஞானி. அவர் மிகவும் வெறுக்கத்தக்க சிற்றின்ப வாழ்க்கை நடத்தி வந்தார். ஆனால் வைராக்கியம் எந்த நிமிஷம் உதித்ததோ, அதே நிமிஷத்தில் மிகவும் மாறிய மனிதராகிவிட்டார். முற்பிறவியில் சாதனை செய்து அதிலிருந்து வீழ்ந்திருந்ததால் (யோக பிரஷ்டர்), ஒருவித சாதனையும் செய்யாமல் அவர் ஞானியாகிவிட்டார். அவர் முன்பும் இப்பொழுதும் மிகவும் மரியாதையோடு மதிக்கப்பட்டு வருகிறார்.

கடவுளும், கடவுள் அனுபூதியும் நம் தேவையைப் பொருத்த விஷயம். நீ கடவுளை உண்மையாக வேண்டினால், கடவுளின் தேவை உண்மையாக உன்னுடைய இதயத்திலிருந்து வந்தால், கடவுள் உடனே தோன்றுவார்.

எவன் முற்றிலும் காமமும் அகங்காரமும் இல்லாதவனாக, சாத்வீக குணங்களை உடையவனாக இருக்கிறானோ, அவனே உண்மையான சந்நியாசி.

தீவிர வைராக்கியம் இல்லாமல் செய்யும் ஆன்ம-விசாரமும் (ஆன்மாவின் தன்மையைப் பற்றிய ஆராய்ச்சி) யோக சாதனையும் பயனற்றவை யாகின்றன.

வைராக்கியம் பெறுவதற்கு, ஒருவன் குடும்ப வாழ்க்கையிலுள்ள அனேக விதமான பந்தங்களைப் பற்றியும் சிக்கல்களைப் பற்றியும் தீவிரமாக யோசித்து யோசித்து ஆராய வேண்டும்.

நீ வைராக்கியம் பெற்றால், அது மனம் சுத்தம் (சித்த -சுத்தி) அடைவதன் ஓர் அறிகுறி என்று தைரியம் அடை.

முன்பு எந்தப் பொருள்கள் சந்தோஷத்தைக் கொடுத்தனவோ, அவை இப்பொழுது துன்பத்தைக் கொடுக்கின்றன. இது வைராக்கியத்தின் அறிகுறி.

மிகவும் அன்போடு நேசிக்கப்பட்ட உறவினர்களின் பிரிவாலோ அல்லது செல்வத்தின் பிரிவாலோ, தாற்காலிகமாக ஏற்படும் வைராக்கியத் திற்குக் காரண - வைராக்கியம் என்று பெயர். அது உன்னுடைய ஆன்மீக முன்னேற்றத்திற்கு அதிகமாக உபயோகப்படாது. சந்தர்ப்பம் கிடைத்ததும், இழந்த வஸ்துகளைப் பற்றிக் கொள்ள மனம் எப்பொழுதும் தயாராகக் காத்துக் கொண்டிருக்கும்.

ஆகையால் விவேகம் அல்லது பகுத்தறிவால் உண்டான வைராக்கியம் ஆன்மீக முன்னேற்றத்திற்கு அத்தியாவசியமானது. சாதகனுக்கு உதவி செய்யும். அது அவனுக்கு நல்ல ஆன்மீக முன்னேற்றத்தைக் கொடுக்கும்.

**வைராக்கியத்தின் விதங்கள்.**

வைராக்கியம் இரண்டு வகைப்படும். அவையாவன, காரண-வைராக்கியம், (சில கஷ்டங்களால் உண்டானது) விவேக பூர்வக - வைராக்கியம் (நித்திய அநித்திய பகுத்தறிவால் உண்டானது)

முதலில் சொல்லப்பட்ட காரண-வைராக்கியமுள்ள ஒருவனுடைய மனம், விடப்பட்ட வஸ்துகளைப் பற்றிக்

கொள்ள சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து எப்பொழுதும் தயாராக இருக்கிறது. முதல் சந்தர்ப்பம் கிடைக்க வேண்டியதுதான் தாமதம், அவன் வீழ்ச்சியடைந்து, தான் முன்பிருந்த நிலைக்குப் போய் விடுகிறான். விஷயங்கள் (வஸ்துகள்) இரு மடங்கு பலத்தோடு அவனை எதிர்த்து, பழி தீர்த்துக் கொண்டு, அவனுக்கு நாசத்தை விளைவிக்கின்றன. ஆனால், வஸ்துகளின் நிலையற்ற தன்மையாலும், அவற்றின் மேல் ஆழ்ந்த விசாரத்தாலும், விவேகத்தாலும் பெற்ற நிரந்தர வைராக்கியமுள்ளவன், நல்ல ஆன்மீக முன்னேற்றத்தைப் பெறுவான். அவனுக்கு வீழ்ச்சி என்பதே கிடையாது.

கேட்ட அல்லது பார்த்த வஸ்துகளிடத்தில் ஆசையில்லாமலும், அவ்வஸ்துகளை அடக்கி வென்றுவிட்டோமென்னும் உணர்ச்சியும் ஏற்படும் ஒருவனுக்கு என்ன மனோநிலை இருக்கிறதோ, அதுவே பற்றற்ற அல்லது வைராக்கியமுள்ள நிலை (பதஞ்சலி யோக சூத்திரம் 1 - 15).

எல்லாவிதப் பந்தங்களிலிருந்தும் எப்பொழுது மனம் முற்றிலும் விலகியிருக்கிறதோ, அப்பொழுது தான் உண்மை ஞானம் உதயமாக ஆரம்பிக்கிறது; சமாதி ஏற்பட ஆரம்பிக்கிறது. இரகசிய சக்திகள், மோட்சம் பெறுதல், தேகமற்ற நிலை, ப்ரகிரிதி லயம் முதலியவை மனோ மயக்கங்கள். இவ்வித மயக்கங்களிலிருந்து ஒருவன் பூரணமாக விலகி இருக்க வேண்டும். யோக சாதனை செய்யும் ஒருவன் பரிபூரண வைராக்கியத்தில் ஸ்தாபிதம் பெறும் பொழுது சமாதி தானாகவே வருகிறது.

பரா-வைராக்கியம் (வைராக்கியத்தின் மிக மிக உச்சநிலை) அஸம்பிரக்ஞான சமாதிக்கு வழியாகும்.

**வைராக்கியத்தின் நிலைகள்** (Stages) :

வைராக்கியத்தில் நான்கு நிலைகள் இருக்கின்றன.

**(1) யதமானம்** : இது, மனதைப் பழைய விஷய வழியில் செல்லவிடாமல் முயற்சி செய்வதாகும்.

**(2) வ்யதிரேகம்** : இந்த நிலையில் சில வஸ்துகள் உன்னை வசீகரிக்கின்றன, ஆனால் நீ அந்த வசீகரத்தையும் பந்தத்தையும் வெட்டி வீழ்த்த முயற்சி செய்கிறாய். சிறிதுசிறிதாக அந்த வஸ்துகளிடத்தில் வைராக்கியம் ஏற்படுகிறது. பிறகு வைராக்கியம் முதிர்ச்சி அடைகிறது. ஏதாவது வஸ்துகள் உன்னை மயக்கும்போது, நீ அவற்றைத் தயக்கமின்றி விட்டு விட வேண்டும். இந்த மயக்கும் வஸ்துகளிடத்திலும் நீ வைராக்கியத்தை ஏற்படுத்திக் கொண்டு அதையும் முதிர்ச்சி பெறச் செய்ய வேண்டும். இந்த நிலையில் வெவ்வேறு வஸ்துகளிடத்திலுள்ள வைராக்கிய நிலையைப் பற்றி நீ அறிந்திருக்கிறாய்.

**(3) ஏகேந்திரியம்** : இந்த நிலையில் இந்திரியங்கள் அடக்கப்பட்டு ஸ்திரமாக இருக்கின்றன, ஆனால் வஸ்துகளிடத்தில் மனதிற்கு விருப்போ வெறுப்போ இருக்கிறது. அதாவது, மனமாகிய ஒரே இந்திரியம் மட்டும் தானாகவே இயங்குகிறது.

**(4) வசீகரன்** : வைராக்கியத்தின் இந்த உச்சநிலையில், வஸ்துகள் இனி உன்னை மயக்குவதில்லை. இந்திரியங்கள் முற்றிலும் அடங்கி சாந்தமாக இருக்கின்றன. மனம் விருப்பு வெறுப்புகள்

இல்லாமல் இருக்கிறது. பிறகு நீ உச்சநிலை அல்லது சுதந்திரத்தை அடைகிறாய். இப்பொழுது உன் உச்சநிலையைப் பற்றி நீ நன்றாக அறிந்திருக்கிறாய். வைராக்கியம் இல்லாமல் ஒருவித ஆன்மீக முன்னேற்றமும் அடைய முடியாது.

வைராக்கியம் மூன்று வகைப்படும். அவையாவன, மந்த வைராக்கியம், தீவிர வைராக்கியம், தீவிர-தர வைராக்கியம் அல்லது அதிதீவிர வைராக்கியம். மந்த வைராக்கியம் வாழ்க்கையின் நோக்கத்தை அடைய உனக்கு உதவி செய்யாது.

ஆசைக்கு நேர் எதிரானது வைராக்கியம். அது ஆசையின்மை அல்லது பற்றின்மையாகும். இப்பொழுதும், இனி எப்பொழுதும் இந்திரிய வஸ்துகளிடத்தில் சம்பந்தமும் கருத்தும் இல்லாமல் இருத்தலே வைராக்கியமாகும். பொருட்பற்றுள்ள கொழுத்த மனதை வைராக்கியம் மெலிய அடிக்கிறது. அது மனதை உட்திருப்புகிறது. சாதகனுக்கு இது மிகவும் இன்றியமையாததாகும். நிர்விகல்ப சமாதி பெறுவதற்கு இது ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.

விவேகம் அல்லது பகுத்தறிவால் உண்டாகும் வைராக்கியம் நிரந்தரமாயும் அசைக்க முடியாததாயும் இருக்கும். பிறப்பு, இறப்பு, கவலை, மனோ வேதனை, கஷ்டம், வியாதி, பிரிவு, எதிர்ப்பு, ஏமாற்றம், பயம் இவைகளோடு கூடிய இந்த வாழ்க்கையை நீ நன்றாக யோசித்துப் பார்த்தால், இந்திரிய வாழ்க்கையில் உள்ள குற்றங்களையும், உலகத்திலுள்ள எல்லா வஸ்துகளின் நிலையற்ற அழியும் தன்மையையும் நீ நன்றாக ஆராய்ந்து அறிவாயானால், உடனே உனக்கு வைராக்கியம் உதயமாகும்.

வைராக்கியத்தை வளர்ப்பது எப்படி?

பர்த்ருஹரியாரின் 'வைராக்கிய சதக'த்தைப் படிப்பதாலும், பற்றற்ற சாது, சந்நியாசிகளின் சங்கத்தாலும் ஒருவன் வைராக்கியத்தை வளர்க்க முடியும். இறந்த மனிதனின் துக்கக் கூட்டத்திலிருக்கும் போது ஏற்படும் தாற்காலிக வைராக்கியமும், (மயான வைராக்கியமும்) கர்ப்பம் தரித்துள்ள ஒரு பெண் பெறும் பிரசவ வைராக்கியமும், ஆன்மீகத்தில் முன்னேற்றம் அடைய உதவி செய்யமாட்டா. சந்தர்ப்பம் கிடைத்ததும் மனம் இழந்த பொருள்களைப் பாய்ந்து பிடித்துக் கொள்ளும்.

''ஸ்வாமிஜீ மகராஜ், நாங்கள் சென்ற பன்னிரண்டு வருஷங்களாக தியானம் செய்கிறோம். ஆனால் நாங்கள் ஏன் ஒருவித திடமான ஆன்மீக முன்னேற்றமும் பெறவில்லை என்று எங்களுக்குத் தெரியவில்லை" என்று சாதகர்கள் சாதாரணமாக என்னிடம் முறையிடுகிறார்கள். தீவிர வைராக்கியம் இல்லாமையே இதற்குக் காரணம். தியானம் செய்யும்போதுகூட, எப்பொழுதும் மனம் வஸ்துகளையே நினைத்துக் கொண்டிருக்கும். சாதகர்களுக்குத் தீவிர வைராக்கியம் மட்டுமே ஆத்மானுபூதியடைய உதவி செய்ய முடியும்.

பரம் பொருளின் ஞானத்தால் எந்த நிலையில் குணங்களிடத்திலுள்ள (சத்துவம், ராஜஸம், தாமஸம்) பற்றும் இல்லாமற் போகிறதோ, அந்த நிலையே பராவைராக்கியம் அல்லது மேலான பற்றின்மை நிலையாகும். (பதஞ்சலி யோக சூத்திரம் 1.16)

இதற்கு முன் சூத்திரத்தில் சொல்லப்பட்ட வைராக்கியம் அபரா வைராக்கியம் (கீழ்த்தரமானது). அந்த நிலையில் சத்துவ குணம் அதிகமாக இருக்கிறது. சத்துவம், தாமஸத்துடனும் ராஜஸத்துடனும் கலந்திருக்கிறது. யோகி சித்திகளைப் பெறுகிறான். ஆனால் பரா-வைராக்கியம் பெற்றுள்ள யோகி, சித்திகளை வெறுத்துத் தள்ளிவிட்டு ஆத்மானுபூதி அல்லது பரம்பொருளின் தரிசனத்தைப் பெறுகிறான்.

சாதாரண வைராக்கியத்தில், வாசனை, ஆசை - ஆகியவற்றின் அறிகுறிகள் காணப்படுகின்றன. ஆனால் பரா-வைராக்கியத்தில் வாசனைகள், சம்ஸ்காரங்கள், ஆசைகள் ஆகியவை எல்லாம் அடியோடு எரிக்கப்படுகின்றன. பரா - வைராக்கியத்தில் ஆசையே இருக்காது. முற்றிலும் ஆசையின்மையே பரா-வைராக்கியமாகும். "தன்னடக்க முள்ளவனிடமிருந்து வஸ்துகள் விலகிவிடுகின்றன; ஆனால் அவற்றின் மேலுள்ள பற்று மட்டும் இருக்கிறது. ஆனால் பரம்பொருளைப் பார்ப்பவனுக்கு இந்தப் பற்றுகளும் அற்றுப் போய்விடுகின்றன" (கீதை. அத் II - 59).

மனதில் வைராக்கியம் எப்படி உதிக்கிறது என்று கவனி. நிலையற்ற அழியும் தன்மையுள்ள எல்லாப் பொருள்களும் எல்லோருடைய மனதிலும் ஒருவித வெறுப்பை ஏற்படுத்துகிறது. அவை ஏற்படுத்துகிற வெறுப்பின் சக்திக்குத் தகுந்தவாறு ஒவ்வொரு வருடைய மனதிலும் பிரதிபலிப்பு ஏற்படுகிறது. நம்முடைய மனதிலே அடக்க முடியாத ஓர் உணர்ச்சி ஏற்படுகிறது. அதாவது நம்முள்ளிருக்கும் அழியாத பொருளை அழியும் பொருள்கள் திருப்தி செய்ய

முடியாது, நம்முடைய மாறாத, முடிவில்லாத ஆன்மாவை அழிக்கக்கூடிய மாறுகின்ற பொருள்கள் திருப்தி செய்ய முடியாது என்னும் உணர்ச்சி.

ஆடம்பர வாழ்க்கையில் உனக்கு ஆசையில்லாத போது, ஆடம்பர வாழ்க்கை உன்னை வசீகரிக்க முடியாது. மாமிசமும் சாராயமும் மகிழ்ச்சி தரக் கூடியவையல்ல என்ற எண்ணம் உன் மனதில் நன்றாகப் பதிந்திருக்கும்போது, மாமிசமும் சாராயமும் உன்னை மயக்க முடியாது. அதேபோல், ஒரு பெண் வெறும் சீழ், சிறுநீர், எலும்பு, சதை - இவற்றால் ஆன ஒரு தோற்றம் என்னும் எண்ணம் உன் மனதில் நன்றாகப் பதிந்திருக்கும் போது, பெண் உன்னை மயக்க முடியாது. அம்மாதிரி சந்தர்ப்பங்களில் உனக்கு மாமிசமோ, சாராயமோ, பெண்ணோ கிடைக்கா விட்டால், அதனால் உன் மனது துன்புறுத்தப்படாது.

ஓர் அழகான இளம் மங்கையிடம் உனக்கு ஏன் கவர்ச்சி ஏற்படுகிறது? இந்தப் பிரச்சினையை நீ எப்பொழுதாவது ஆழ்ந்து ஆராய்ந்திருக்கிறாயா? இதற்கு விடை : உன்னுடைய அறியாமை காரணமாக அவளிடமிருந்து இன்பம் பெறலாம் என்று நீ வீணாக நினைக்கிறாய். நீ வைராக்கியமும் விவேகமும் பெற்றிருந்தால், அவளிடமிருந்து இன்பத்திற்குப் பதிலாக அளவிட முடியாத துன்பமே உனக்கு வந்து சேரும் என்று அது உடனே உனக்குக் காட்டும். உடனே உன் மனம் அவ்வஸ்துகளிலிருந்து (பெண்) பிரிந்து தன்னை அடக்கிக் கொள்ளும்.

எப்பொழுது மனம் ஆசைகள் அற்றுப் போய் இன்பத்திலும் துன்பத்திலும் பற்றில்லாமல், எந்த வஸ்துவாலும் வசீகரிக்கப்படாமல் இருக்கிறதோ,

அப்பொழுதுதான் அது தூய்மையடைந்து கூண்டி லிருந்து விடுவிக்கப்பட்ட பறவை போல், மகாமா யையின் பிடியிலிருந்து விடுவிக்கப்படுகிறது.

மனதில் வைராக்கியம் உதித்ததும், அது தெய்வீக ஞானத்தின் கதவைத் திறக்கிறது. உலகியல் இன்பங்களை அனுபவிப்பதால் நிரந்தரமான, உண்மையான திருப்தி ஏற்படுவதில்லை. தாங்கள் நாடிச் செல்லும் பொருள்கள் பொய்யானவை என்றும், தாங்கள் வசிக்கும் இவ்வுலகம் எல்லாவிதமான கஷ்டங்களாலும் சூழப்பட்டது என்றும் நன்றாகத் தெரிந்திருந்தும்கூட, மக்கள் மிக ஆவலோடு அவ்வஸ்துகளை நாடிச் செல்கிறார்கள். இதுதான் மாயை. மனம் ஆத்மாவில் சாரும் பொழுது தான் நித்திய - திருப்தி அல்லது அழிவில்லாத திருப்தி வருகிறது. ஆத்மானுபூதி ஏற்படும்பொழுது அல்லது ஆத்மா அறியப்படும்பொழுது எல்லா ஆசைகளும் திருப்தி செய்யப்படுகின்றன.

சில நேரங்களில் ஒரேவித சாதனையில் மனம் வெறுப்படைகிறது. அது வேறுவிதமான சாதனையை வேண்டுகிறது. ஒரேவிதமான சாதனையில் அலுப்பு ஏற்பட்டு மனம் கிளர்ச்சி செய்கிறது. அம்மாதிரி நேரங்களில் மனதை எப்படி நயப்படுத்தி, சிறிது தளர்ச்சி கொடுத்து வேலை வாங்க வேண்டுமென்று சாதகர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். சாதனையை நிறுத்துவது மிகப் பெரிய தவறாகும். எக்காரணத்தை முன்னிட்டும் ஆன்மீகப் பயிற்சிகளை விட்டுவிடக் கூடாது. மனமாகிய தொழிற்சாலையின் உள்ளே புக, தீய எண்ணங்கள், எப்பொழுதும் தயாராகக் காத்துக் கொண்டிருக்கின்றன. யோக சாதனை செய்பவன் தன்

சாதனையை நிறுத்தினால், அவனுடைய மனம் சாத்தானின் உறைவிடமாகிவிடும். எதையும் எதிர்பார்க்காதே. நித்திய கர்மங்களாகிய தியானம், தவம் ஆகியவற்றில் சிரத்தையுடனும் ஒழுங்காகவும் இரு. நீ தேர்ந்தெடுத்த பாதையிலிருந்து கொஞ்சம்கூட விலகாதே. பலன் தானாகவே வரும். உன்னுடைய முயற்சிகள் வீண்போகாமல் நிச்சயமாக பெரிய வெற்றி அடைவாய். மனதைத் தூய்மைப்படுத்தி ஒரு முனையாக்க மிக நீண்ட காலம் ஆகிறது. சாந்தமாயும் பொறுமையாயும் இரு.

பற்றாகிய பந்தத்தை அறு

பற்று, மாயையின் முதல் குழந்தை. கடவுளின் லீலைகள், பற்றின் சக்தியால் காப்பாற்றப்பட்டு வருகின்றன. குடிப்பழக்கமில்லாத ஒருவன் தீய நண்பர்களின் சேர்க்கையால் சிறிதளவு சாராயத்தை ருசி பார்க்கிறான். அந்தச் சாராயத்தினிடத்திலேற்படும் பந்தத்தால் அவன் நாளடைவில் பெரிய குடிகாரனாகிறான். புகைபிடிக்கும் பழக்கமில்லாதவன், ஒரு முறை புகை பிடிக்கிறான். ஆனால் அதில் ஏற்படும் பற்றால் நாளடைவில் அவன் ஒரு பெரிய புகைபிடிப்பவனாக விடுகிறான். உலகத்திலுள்ள எல்லாப் பசைப்பொருள்களையும் ஒன்றாகக் கலப்பதால் ஏற்படும் பொருள் போல, அவ்வளவு சக்தி-வாய்ந்த ஓர் ஒட்டிக் கொள்ளும் சக்தியுள்ள கலப்புப் பொருள் மனதிலிருக்கிறது. இந்தக் கலப்பால் மனமானது உலகத்திலுள்ள எல்லா வஸ்துகளோடும் ஒட்டப்பட்டிருக்கிறது. ஆகையால் பந்தம் அல்லது பற்று மிகவும் சக்தி வாய்ந்தது.

"என் தேகம், என் மகன், என் மனைவி, என் வீடு, என் சொத்து, என் தோட்டம்" என்று இப்படியாகச் சொல்லாதே. உலகத்திலுள்ள எண்ணற்ற துன்பங்களுக்கும் கஷ்டங்களுக்கும் பந்தமே மூலகாரண மாகும். மனதைச் சிறிது சிறிதாகக் கட்டுப்படுத்து. பழைய தீய பழக்கங்கள் தலைதூக்கும். அவற்றை அடியோடு அழி. முற்றிலும் பற்றற்ற வாழ்க்கை நடத்து. இதுவே பிரம்மானந்தத்தை அடைவதற்கு உதவும் கருவியாகும்.

ஆனால் பற்றற்று சம்பந்தமின்றி இடைவிடாது வேலை செய். அப்பொழுதுதான் நீ மாறுபட்டவன் என்பதை உணர முடியும். உண்மை மனோ பாவத்தோடு நேர்மையான முறையில் செய்யப்படும் பொழுது, கர்ம-யோகம், ஒருவனை ஒப்பற்ற உன்னதமான நிலைக்கு உயர்த்துகிறது. ஒருவன் பொறுமையோடு வேலை செய்ய வேண்டும். அவ்வளவுதான். நிஷ்காம்ய அல்லது பயன் கருதாத கர்மயோகத்தை அடிப்படையாகப் பழகிக் கொள்ளாவிட்டால், ஒருவித தியானமும் சமாதியும் கை கூடாது. பற்றில்லாமல் வேலை செய்வது எளிதான காரியமல்ல. அதற்கு மிகவும் கஷ்டப்பட வேண்டும். ஆனால் பொறுமையும் மனோதிடமும் உள்ளவனுக்கு அது மிகவும் சுலபமாகவும் இன்பகரமாகவும் மாறிவிடுகிறது. ஆனால் பேரின்பமும் அமரத்துவமும் வேண்டுமானால், நீ எப்படியும் அதைச் செய்தே தீர வேண்டும். இப்பொழுது இல்லாவிட்டால் எப்பொழுதாவது ஒவ்வொருவரும் செய்ய வேண்டும். இன்னும் ஐந்நூறு பிறவிகளுக்குப் பிறகாவது செய்ய வேண்டும். இதைச் செய்வதைத் தவிர வேறு வழி கிடையாது. அப்படியிருக்க "இப்பொழுதே ஏன்

கூடாது? இந்தப் பிறவியிலேயே ஏன் கூடாது?" இறப்பு, பிறப்பாகிய இந்த துன்பச் சக்கரத்தைக் குறைத்துக்கொண்டு ஆத்ம ஆனந்தத்தை இப்பொழுதே, இந்த வினாடியே ஏன் அனுபவிக்கக் கூடாது? இதிலேதான் உண்மை அறிவு இருக்கிறது.

வேலை, துன்பத்தைக் கொடுக்க முடியாது. ஆனால் அவ்வேலையில் நமக்கு இருக்கும் பற்றும் சம்பந்தமுமே எல்லாவிதக் கஷ்டங்களையும் பந்தங்களையும் ஏற்படுத்துகிறது. வேலையின் இரகசியத்தையும், கர்ம - யோகத்தின் தொழில் முறையையும் (Technjque) அறிந்துகொண்டு கடவுள் - உணர்ச்சி அடை. இந்த ஞானாக்கினி அல்லது ஞானமாகிய தீ, எல்லாக் கர்மங்களின் பலன்களையும் எரித்து அழித்துவிடும்.

## நிவ்விருத்தி அல்லது துறவு மார்க்கம்

திடமான மனோ உறுதியும், தீர்மானமும் பெறு. நிவ்விருத்தி மார்க்கத்தை மேற்கொண்டு பிறகு ஒரு பொழுதும் வீடு திரும்ப நினைக்காதே. எதையும் யோசித்துச் செய். தைரியமும், நிலையான மனமும், வாழ்க்கையில் ஒரு திடமான நோக்கமும் பெறு. தடுமாறிக் கொண்டிருக்காதே. உடல், உயிர் உட்பட உன்னிடமுள்ள எல்லாவற்றையும் விடத் தயாராக இருக்கிறாயா? அதன் பிறகே என்னிடம் வா. அதன் பிறகே நிவ்விருத்தி மார்க்கத்தை மேற்கொண்டு சந்நியாசத்தைத் தழுவு. நீ உறுதியான தீர்மானத்திற்கு வருவதற்கு முன் இரண்டு முறை யோசித்துப் பார். நீ நினைப்பது போல் இது ஒரு சுலபமான மார்க்கமில்லை. இது முழுவதும் முட்களால் நிறைந்திருக்கிறது. பணிவுடனும், பொறுமையுடனும், விடாமுயற்சியுடனும் இரு. சித்திகளுக்கும்

குண்டலினியைச் சீக்கிரம் எழுப்புவதற்குக் கவலைப் படாதே. நான் உனக்குச் சேவை செய்வேன். நான் உனக்கு உதவி செய்வேன். நான் உன்னைப் பாதுகாப்பேன். வருத்தப்படாதே. கவலைப்படாதே. நான் எப்பொழுதும் உன் சேவகன். உதார மனமுள்ளவனாக இரு. தாற்காலிக உணர்ச்சியின் எழுச்சிகள் அதிகப் பயன்தரமாட்டா. சில இளம் மனிதர்கள் தங்கள் வீட்டிற்குத் திரும்பிவிட்டார்கள். இம்மார்க்கத்தில் அனேக கஷ்டங்கள் இருக்கின்றன. ஆனால் இம்மார்க்கம் உன்னை மன்னர்களுக்கெல்லாம் மன்னனாக, சக்கரவர்த்திகளுக்கெல்லாம் சக்கரவர்த் தியாகச் செய்யக் கூடியது.

நிவ்விருத்தி மார்க்கத்தை மேற்கொண்டு ஏகாந்தத்தில் இருக்க விரும்புவோர், உலகத்தில் வாழும் பொழுதே மௌனம், பிறருடன் சேராமை, இந்திரியம், மனம், உடல் இவற்றையடக்கி ஒழுங்குபடுத்த பழகிக் கொள்ள வேண்டும். கடினமான வாழ்க்கைக்கு, கிடைத்ததைச் சாப்பிடுவதற்கும், தரையிலோ அல்லது பாயிலோ தலையணை இல்லாமல் படுத்து உறங்குதற்கும், வெறும் காலுடன் குடையின்றி நடப்பதற்கும் அவர்கள் தங்களைப் பழக்கிக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் துறவு மார்க்கத்தின் கடினமான நோன்புகளைத் தாங்க முடியும். அவர்கள் யாசிப்பதில் ஏற்படும் வெட்கத்தையும் நாணத்தையும் விட்டுவிட வேண்டும்.

நிவ்விருத்தி மார்க்கத்தை மேற்கொள்ளும் சாத்கர்கள், தங்கள் மனோ சக்தியை எப்படிப் பயன்படுத்திக் கொள்வது என்று தெரிந்து கொள்ளாததாலும், தினசரி வழக்கங்கள் (நியமங்கள்)

வைத்துக் கொள்ளாததாலும், தங்கள் ஆசிரியரின் கட்டளைகளைப் பின்பற்றி நடக்காததாலும், சில காலத்திற்குள் மந்தம் அடைந்து விடுகிறார்கள். ஆரம்பத்தில் வைராக்கியம் பெறுகிறார்கள். ஆனால் ஆன்மீகப் பாதையில் அவர்களுக்கு அனுபவமில்லை. கடைசியில் அவர்கள் ஒருவித முன்னேற்றமும் காண்பதில்லை. சமாதி பெறுவதற்கு தீவிர இடைவிடாத தியானம், மிக அவசியமானது.

என்ன நேர்ந்தபோதிலும் இந்த மார்க்கத்தைப் பின்பற்ற நீ ஒரு திடமான மன உறுதியோடு தீர்மானித்து விட்டாயா? இவ்வுடலையும் உயிரையும் உண்மைக்காகத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறாயா? சந்நியாசத்தின் மகிமையையும் ஏகாந்தத்தின் அவசியத்தையும் நீ நன்றாக அறிந்து கொண்டாயா? உன்னுடைய மகள், சகோதரன், தாய் அல்லது மகன் இங்கு வந்து அழுதால் மோகத்தை எதிர்த்து நிற்க, வேண்டிய அளவு தைரியம் பெற்றிருக்கிறாயா? இங்கு வந்த பிறகு உன்னுடைய உறவினருடன் உள்ள எல்லாத் தொடர்புகளையும் நிறுத்திக் கொள்ள முடியுமா? எல்லாக் கடிதப் போக்குவரத்துகளையும் நிறுத்திக் கொள்ள முடியுமா? எதையும் மறைக்காதே. சற்றும் கபடமின்றிச் சொல். ஒளிக்காமல் வெளிப்படையாகச் சொல். வஞ்சகமில்லாமல் சொல். இப்பொழுது என்னிடம் உண்மையைச் சொல். உன்னுடைய மனதை நன்றாகத் திறந்து காட்டு.

தீவிர ஆன்மீக முன்னேற்றமடைய விரும்பினால், நீ மிகவும் ஜாக்கிரதையாகக் கண் விழித்துக் கொண்டிருக்க வேண்டும். சிறிதளவு வெற்றியில்

திருப்தி அடைந்து விடாதே. சிறிது மன அமைதி, சிறிது ஒரு நிலை மனம், சில தேவதைகளின் தோற்றம், சித்தி, பிறர் மனதை அறிந்து கொள்ளும் சக்தி - இவற்றில் திருப்தியடைந்து விடாதே. இதைவிட உன்னதமான, அடைய வேண்டிய உச்ச நிலைகள் இருக்கின்றன.

வஸ்துகளிடத்திலுள்ள கவர்ச்சியும் அனேகவிதமான சிக்கல்களும் மனிதனை இவ்வுலகத்தோடு பந்தப்படுத்துகின்றன. இந்த எல்லாக் கவர்ச்சிகளையும் சிக்கல்களையும் களைந்தெறிவதே உண்மைத் தியாகமாகும். கவர்ச்சி, சிக்கல்களிலிருந்து பூரண விடுதலை பெற்றிருக்கும் சந்நியாசி அல்லது யோகி, அளவில்லாத ஆனந்தத்தையும், உன்னதமான சந்தோஷத்தையும் சாந்தத்தையும் அனுபவிக்கிறான். ஏற்றத்தாழ்வும், கற்பனையும் மனதின் இரண்டு விதைகள். ஏற்றத்தாழ்வு விறகு. கற்பனை தீ. முடிவில்லாத கற்பனையாகிய தீ ஏற்றத்தாழ்வாகிய விறகால் வளர்க்கப்பட்டு வருகிறது. ஏற்றத்தாழ்வாகிய விறகு கிடைக்காவிட்டால் கற்பனையாகிய தீ தானாகவே அணைந்து விடும். பிறகு, மனம் சமநிலை பெற்று அமைதியடைகிறது. அது தன்னுடைய ஆதாரமாகிய ஆன்மாவினுள் இழுத்துக் கொள்ளப்படுகிறது.

நீ தனியாக வந்தாய். நீ ஆடைகளின்றி வந்தாய். நீ அழுதுகொண்டே வந்தாய். நீ தனியாகப் போவாய். நீ ஆடைகளின்றிப் போவாய். நீ அழுதுகொண்டே போவாய். அப்படியிருக்க நீ ஏன் உன் பொய்யான பட்டங்களிலும் செல்வத்திலும் அறிவிலும் கர்வம் கொள்கிறாய்? தாழ்மையாக, பணிவாக, அமைதியாக

இரு. பணிவால் நீ முழு உலகத்தையே வென்றுவிடலாம். ஆகையால் மனம், வாக்கு, காயங்களில் பரிசுத்தமாக இரு. இதுவே ஆன்மீக வாழ்க்கையின் இரகசியமாகும். இந்த இரகசியத்தை உபநிடதங்களும் கீதையும் திரும்பத் திரும்பக் கூறுகின்றன.

காமம் நிறைந்த ஒரு மனிதனுக்கு இவ்வுலகத்தில் அதிக இன்பம் இருக்கிறது. அவன் பணம், பெண் ஆகியவற்றை நாடி அலைகிறான். அவன் மனம் நிலையில்லாமல் நெறி தவறி இருளடைந்து இருக்கிறது. பரிதாபகரமான மனிதன், பாவம்! அவன் உண்மையில் என்ன செய்கிறான் என்று அவனுக்கே தெரியாது. ஆனால் ஒரு யோகிக்கு அல்லது விவேகமுள்ளவனுக்கு இந்த உலகம் ஒரு தீப்பந்தைப் போன்றது. எல்லா ஜீவராசிகளும் வாட்டப்படும் ஒரு பெரிய உலை இவ்வுலகம். அத்யாத்மிக, அதிதெய்விக, அதிபௌதிக என்னும் மூன்றுவித தாபங்கள் அவனைச் சுட்டு எரிக்கின்றன.

நண்பனே! கோடானுகோடி முற்பிறவிகளில் நீ பெற்றிருந்த தாய் தந்தையர்களுக்கும் மனைவிகளுக்கும் ஓர் அளவு இருக்கிறதா? இருந்தும் இந்தப் பொய்யான உறவும் பற்றுகளும் உன்னை விட்டபாடில்லை. இன்னும் விவேகம் உதிக்கவில்லை.

தினமும் சாப்பிடுதல், குடித்தல், தூங்குதல் போன்ற பழைய வழக்கங்களையே மறுபடியும் மறுபடியும் செய்ய உனக்கு வெட்கமாக இல்லையா? உன்னுடைய பட்டங்களிலும் அறிவிலும் நீ வீண் கர்வமுள்ளவனாக இருக்கிறாய். உன்னுடைய வாழ்க்கையை நீ சிறிதேனும் திருத்திக் கொண்டிருக்கிறாயா? கொஞ்ச நாள்களுக்கு

முன் ஏற்பட்ட பீகார், குவெட்டா பூகம்பங்களிலிருந்து நீ என்ன தெரிந்து கொண்டாய். எங்கு எல்லா ஆசைகளும் ஆர்வங்களும் வேருடன் அழிக்கப்படுகின்றனவோ, அந்த அழியாத பீடத்தைப் பெற நீ முயற்சிக்கிறாயா? அமரத்துவம், அழியாத ஆனந்தம், அமைதி ஆகியவற்றைக் கொடுக்கக் கூடிய வாழ்க்கையின் மேலான நோக்கமாகிய ஆத்மானுபூதி அடைய சிறிய அளவிலாவது நீ முயற்சி செய்கிறாயா? நீ இன்னும் தவழ்ந்து கொண்டிருக்கவில்லை. எழுந்து நின்று நடக்கக் கற்றுக் கொண்டுவிட்டாய். நினைக்க, ஆராய்ந்து அறிய, மதிப்பிட, ஊகிக்க, வாதிக்க உன்னால் முடியும். இந்த விலையுயர்ந்த எல்லாச் சக்திகளையும் வாழ்க்கையையும் நீ தியானத்திற்கும் ஆத்மானுபூதிக்கும் பயன்படுத்திக் கொள்ளமாட்டாயா? இதைச் செய்வேன் என்று எனக்கு ஒரு கண்டிப்பான சத்திய வார்த்தை கொடுக்க முடியுமா? நீ இப்பொழுது என்னிடம் உண்மையைச் சொல். யோக ஏணியில் ஏறு. அமரத்துவமாகிய அமிர்தத்தைப் பருகு.

விவேகத்திலிருந்து வரும் வைராக்கியம் நீடித்து நிலைத்திருக்கக் கூடியது. இதுவே சாதகனுக்கு எப் பொழுதும் முன்னேற்றத்தைக் கொடுக்கும். மயானத்தில் சாவுச் சடங்கில் ஈடுபட்டிருக்கும் ஒருவனுடைய மனதில் உதிக்கும் வைராக்கியத்தைப் போலும், குழந்தையைப் பெற்றெடுக்கும் பொழுது ஒரு பெண்ணுக்கு ஏற்படும் தாற்காலிக வைராக்கியத்தைப் போலும், விவேகத்திலிருந்து வரும் வைராக்கியம் சாதகனுக்கு ஒருபொழுதும் வீழ்ச்சியைக் கொடுக்காது. இவ்வுலகத்திலுள்ளவை எல்லாம் பொய்யானவை என்னும் எண்ணம், மனதில் வைராக்கியத்தை ஏற்படுத்தி இவ்வுலக இன்பத்திலும் வேறு உலக

இன்பத்திலும் ஒரு பற்றின்மையை ஏற்படுத்துகிறது. நல்ல கர்மங்களின் பலன்கள் முடிவடைந்ததும் ஒவ்வொருவரும் சுவர்க்கத்திலிருந்து மறுபடியும் இந்தப் பூலோகத்திற்கு வர வேண்டும்.

இங்குள்ள ஐந்துவித சிற்றின்ப போகங்களே சுவர்க்கத்திலும் நிலவி இருக்கின்றன. அங்கே இன்பம் இங்குள்ளதைவிடத் தீவிரமாயும் நுட்பமாயும் இருக்கும். அவ்வளவுதான். ஒரு விவேகிக்கு இது உண்மையான நிரந்தரமான ஆனந்தத்தைக் கொடுக்க முடியாது. அவன் வானுலக இன்பங்களையும் புறக்கணிக்கிறான். அவனுக்கு மூன்றுலக இன்பங்களின் தன்மையும் நன்றாகத் தெரியும். மேலும் அவை பிரம்மானந்தமாகிய சமுத்திரத்தில் கேவலம், ஒரு துளி என்பதும் அவனுக்குத் தீர்மானமாகத் தெரியும்.

**கீதையின் உபதேசங்களை நினைவில் வைத்துக் கொள்**

பகவத் கீதையின் கீழ்க்கண்ட சுலோகங்களின் மேல் தியானம் செய்தால் உண்மை வைராக்கியத்தைத் தூண்டும்.

“சம்பந்தத்தால் ஏற்படும் சந்தோஷங்கள் துன்பத்தின் கருவாகும், ஏனெனில் அவற்றுக்கு ஆரம்பமும் முடிவும் உண்டு. ஆகையால், அர்ஜுனா, அறிவுள்ளவர்கள் அவற்றில் மகிழ்ச்சியடைவதில்லை" (அத். 5.22)

“விஷய வஸ்துகளிடத்தில் கருத்தில்லாமல் இருத்தல், அகங்காரம் இல்லாமை, இறப்பு பிறப்பாகிய கொடுமை, முதுமை, வியாதி - இவற்றில் உள்ள துன்பங்களை ஆராய்ந்து அறிதல் (அத். 13.8)

"வஸ்துகளோடு இந்திரியங்களின் சேர்க்கையால் முதலில் எது அமுதம் போல் இருக்கிறதோ, அதுவே கடைசியில் நஞ்சுபோல் இருக்கிறது" (அத். 18.38).

இந்த நிலையில்லாத சந்தோஷமற்ற உலகத்தைப் பெற்ற பிறகு, வழிபடு.

**எது வைராக்கியமல்ல?**

வைராக்கியம் என்பது சமூகக் கடமைகளையும் வாழ்க்கையின் பொறுப்புகளையும் விட்டுவிடுதல் என்று அர்த்தமில்லை. உலகத்திலிருந்து பிரித்துக் கொள்வதும் வைராக்கியம் இல்லை. அது இமயமலையின் ஏகாந்த குகையிலோ அல்லது சுடுகாட்டிலோ வாழ்வதில்லை. வேப்பிலைகளைத் தின்றோ பசுவின் மூத்திரம் அல்லது சாணத்தைத் தின்றோ வாழ்வது வைராக்கியமாகாது. சடைமுடி தரித்து கையில் கமண்டலத்தோடு இருத்தலும் வைராக்கியமாகாது. தலையை மொட்டையடித்துக் கொண்டு ஆடைகளைக் களைந்தெறிவதும் வைராக்கியமாகாது.

**வைராக்கியம் எது?**

இவ்வுலகத்தோடு கூடிய எல்லாவித சம்பந்தங் களிலிருந்தும் மானஸீகமாகப் பிரித்துக் கொள்வதே வைராக்கியமாகும். ஒருவன் இவ்வுலகத்திலிருந்தபடியே தன் ஆசிரமத்திற்கேற்ப கடமைகளைச் சிறிதும் பற்றில்லாமல் செய்து கொண்டிருக்கலாம். அவன் ஒரு குடும்பஸ்தனாக இருக்கலாம். இருந்தால் என்ன? அவன் தன் மனைவியோடும் குழந்தைகளோடும் வாழலாம். ஆனால் அதே நேரத்தில் அவன் மனம் முழுவதும்

பற்றற்று இருக்கலாம். அவன் தன் ஆன்மீக சாதனைகளைச் செய்யலாம். உலகத்தில் வாழ்ந்து கொண்டே எவனொருவன் சிறிதும் மனப் பற்றில்லாமல் இருக்கிறானோ அவன் உண்மையிலே ஒரு வீரன். இமாலயக் குகையில் வசிக்கும் ஒரு சாதுவைவிட அவன் மேலானவன். ஏனெனில் அவன் ஒவ்வொரு கணமும் எண்ணற்ற ஆசைகளை எதிர்த்துப் போராடி வெல்ல வேண்டியிருக்கிறது.

ஒரு மனிதன் எங்கே சென்றாலும், அவன் தன்னுடைய அமைதியற்ற, மாறும் தன்மையுள்ள மனதையும் வாஸனைகளையும் சம்ஸ்காரங்களையும் தன்னுடன் எடுத்துச் செல்கிறான். அவன் ஏகாந்தத்தில் வாழ்ந்தாலும், மனக்கோட்டை கட்டுவதிலும் உலகியல் வஸ்துகளை நினைப்பதிலும் ஈடுபட்டிருப் பானேயானால், அவன் உலகியல் மனிதனேயாவான். உலகியல் மனிதனைவிட எவ்விதத்திலும் மேலான வனாகமாட்டான். இந்த நிலையில் அவன் வசிக்கும் குகையும் ஒரு பெரிய நகரமாகிறது. ஆனால் மனம் அமைதியாகப் பற்றுகளிலில்லாமல் இருக்குமானால், கல்கத்தா, பம்பாய் போன்ற அதிக சஞ்சலமுள்ள பெரிய நகரத்தில் மாளிகையில் வசித்த போதிலும் ஒருவன் நல்ல வைராகியாக இருக்க முடியும். அவனுக்கு அந்த பெரிய மாளிகை ஓர் அடர்ந்த காடாக மாறிவிடுகிறது.

ஆசையற்ற ஒரு மனிதன் முற்றிலும் மாறுபட்ட மனமுடையவனாக இருக்கிறான். அவனுடைய அனுபவங்கள் முற்றிலும் மாறுபட்டவை. நிலையில்லாத அழியக் கூடிய இவ்வுலக வஸ்துகளிலிருந்து தன்னைப் பிரித்துக் கொள்ளும் கலையில் அவன் மிகவும்

கெட்டிக்காரன். அவற்றிடத்தில் அவனுக்குக் கொஞ்சம்கூட கவர்ச்சியே கிடையாது. அவன் எப்பொழுதும் பரம்பொருளிலேயே வசிக்கிறான். வாழ்க்கையில் ஏற்படும் இன்ப துன்பங்களில், சுக துக்கங்களில், புகழ்ச்சி இகழ்ச்சிகளில், மரியாதை - அவமரியாதைகளில் எல்லாவித நிலைகளிலும் சம்பந்தமற்று சாட்சியாக இருக்கும் உள்ளுணர்வோடு அவன் தன்னை ஒவ்வொரு கணமும் அடையாளம் செய்து கொள்கிறான். அவன் ஒரு பெரிய புயற்காற்றுக்கிடையில் அசையாது நிற்கும் மலைப் பாறையைப் போலும், அதிசயமான இவ்வுலகக் கண்காட்சியின் பார்வையாளன் போலவும் பற்றற்று நிற்கிறான். இன்பத்தையும் துன்பத்தையும் கொடுக்கக் கூடிய இவ்வனுபவங்களால் அவன் சிறிதும் அசைக்கப்படுவதில்லை. அவற்றிலிருந்து அவன் எண்ணற்ற புத்திமதிகளைக் கற்றுக் கொள்கிறான். அதாவது அவனுக்கு இன்பகரமான வஸ்துகளிடத்தில் விருப்பமும், துன்பகரமான வஸ்துகளிடத்தில் வெறுப்பும் கிடையாது. அவன் துன்பங்களைக் கண்டு பயப்படுவதுமில்லை. இத்துன்பங்கள் தனக்கு ஆன்மீக முன்னேற்றமும் மலர்ச்சியும் கொடுத்து, லட்சியத்தையடைய மிகவும் உதவி செய்கின்றன என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். துன்பங்களே இவ்வுலகத்தில் மிகவும் நல்ல அறிவூட்டும் ஆசிரியன் என்றும் அவனுக்குத் திடமான நம்பிக்கையுண்டு.

இங்கே ஒரு முக்கியமான ஒன்றை அறிவிக்க விரும்புகிறேன். அன்பார்ந்த சாதகர்களே! நீங்கள் வைராக்கியம் வரும், ஆனால் அஜாக்கிரதையாக இருந்து, எல்லாவித உலகப் பற்றுள்ள மனிதர்களுடனும் கலந்து பழகினால், அது

தங்காமல் சீக்கிரம் போய்விடும். ஆகையால் பெற்ற வைராக்கியத்தை நீங்கள் முடிந்த அளவு உச்சநிலைக்கு வளர்க்க வேண்டும். விடப்பட்ட பொருள்களைத் திரும்பப் பெற மனமானது நல்ல தருணம் பார்த்துக் கொண்டேயிருக்கும். எங்கெங்கு, எவ்வெப்பொழுது மனம் சீறித் தலை தூக்குகிறதோ (மனம் பாம்பைப் போன்றது) அப்பொழுதெல்லாம் நீ விவேகத் தினிடத்திலும், அறிவு, வைராக்கியமும் உள்ள மகாத்மாக்களின் சங்கமாகிய அழிக்க முடியாத கோட்டையிலும் தஞ்சம் புக வேண்டும். வைராக்கியத்தில் அனேக நிலை இருக்கிறது. ஒருவன் பிரம்மத்தில் ஸ்தாபிதம் அடையும்போது அவனுக்கு மேலான வைராக்கியம் உண்டாகிறது. அப்பொழுது அவனுக்கு வைராக்கியம் நிரந்தரமாகிறது.

இவ்வுலகத்தில் வாழும்பொழுதே ஒருவன் இன்பத்திலும் துன்பத்திலும் பற்றில்லாத ஓர் உள் மனோ நிலையை வளர்க்க முடியும். இன்பகரமான அனுபவங்களால் ஆட்கொள்ளப்படாமல் அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அவன் அவற்றைப் பற்றி நிற்கக் கூடாது. வெறும் கண்காட்சி காண்பவனைப் போல் சம்பந்தமற்று இருக்க வேண்டும். இப்படியாக சில வருஷங்கள் பழகிய பிறகு, அவனுடைய ஒவ்வொரு அனுபவமும் ஆன்மீக ஏணியில் ஏறும் ஒவ்வொரு படியாகும். கடைசியாக அவனுக்கு உன்னதமான வெற்றி கிடைக்கும். அவன் சமநிலையுள்ள மனதைப் பெறுவான். முற்றிலும் :ற்றற்ற ஒருவனே, மூன்று உலகத்திலும் எல்லோரையும்விட மிகவும் சந்தோஷமான செல்வந்தனாவான். மேலும் அவனே மிகவும்

கெட்டிக்காரன். அவற்றிடத்தில் அவனுக்குக் கொஞ்சம்கூட கவர்ச்சியே கிடையாது. அவன் எப்பொழுதும் பரம்பொருளிலேயே வசிக்கிறான். வாழ்க்கையில் ஏற்படும் இன்ப துன்பங்களில், சுக துக்கங்களில், புகழ்ச்சி இகழ்ச்சிகளில், மரியாதை - அவமரியாதைகளில் எல்லாவித நிலைகளிலும் சம்பந்தமற்று சாட்சியாக இருக்கும் உள்ளுணர்வோடு அவன் தன்னை ஒவ்வொரு கணமும் அடையாளம் செய்து கொள்கிறான். அவன் ஒரு பெரிய புயற்காற்றுக்கிடையில் அசையாது நிற்கும் மலைப் பாறையைப் போலும், அதிசயமான இவ்வுலகக் கண்காட்சியின் பார்வையாளன் போலவும் பற்றற்று நிற்கிறான். இன்பத்தையும் துன்பத்தையும் கொடுக்கக் கூடிய இவ்வனுபவங்களால் அவன் சிறிதும் அசைக்கப்படுவதில்லை. அவற்றிலிருந்து அவன் எண்ணற்ற புத்திமதிகளைக் கற்றுக் கொள்கிறான். அதாவது அவனுக்கு இன்பகரமான வஸ்துகளிடத்தில் விருப்பமும், துன்பகரமான வஸ்துகளிடத்தில் வெறுப்பும் கிடையாது. அவன் துன்பங்களைக் கண்டு பயப்படுவதுமில்லை. இத்துன்பங்கள் தனக்கு ஆன்மீக முன்னேற்றமும் மலர்ச்சியும் கொடுத்து, லட்சியத்தையடைய மிகவும் உதவி செய்கின்றன என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். துன்பங்களே இவ்வுலகத்தில் மிகவும் நல்ல அறிவூட்டும் ஆசிரியன் என்றும் அவனுக்குத் திடமான நம்பிக்கையுண்டு.

இங்கே ஒரு முக்கியமான ஒன்றை அறிவிக்க விரும்புகிறேன். அன்பார்ந்த சாதகர்களே! வைராக்கியம் வரும், ஆனால் நீங்கள் அஜாக்கிரதையாக இருந்து, எல்லாவித உலகப் பற்றுள்ள மனிதர்களுடனும் கலந்து பழகினால், அது

தங்காமல் சீக்கிரம் போய்விடும். ஆகையால் பெற்ற வைராக்கியத்தை நீங்கள் முடிந்த அளவு உச்சநிலைக்கு வளர்க்க வேண்டும். விடப்பட்ட பொருள்களைத் திரும்பப் பெற மனமானது நல்ல தருணம் பார்த்துக் கொண்டேயிருக்கும். எங்கெங்கு, எவ்வெப்பொழுது மனம் சீறித் தலை தூக்குகிறதோ (மனம் பாம்பைப் போன்றது) அப்பொழுதெல்லாம் நீ விவேகத் தினிடத்திலும், அறிவு, வைராக்கியமும் உள்ள மகாத்மாக்களின் சங்கமாகிய அழிக்க முடியாத கோட்டையிலும் தஞ்சம் புக வேண்டும். வைராக்கியத்தில் அனேக நிலை இருக்கிறது. ஒருவன் பிரம்மத்தில் ஸ்தாபிதம் அடையும்போது அவனுக்கு மேலான வைராக்கியம் உண்டாகிறது. அப்பொழுது அவனுக்கு வைராக்கியம் நிரந்தரமாகிறது.

இவ்வுலகத்தில் வாழும்பொழுதே ஒருவன் இன்பத்திலும் துன்பத்திலும் பற்றில்லாத ஓர் உள் மனோ நிலையை வளர்க்க முடியும். இன்பகரமான அனுபவங்களால் ஆட்கொள்ளப்படாமல் அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அவன் அவற்றைப் பற்றி நிற்கக் கூடாது. வெறும் கண்காட்சி காண்பவனைப் போல் சம்பந்தமற்று இருக்க வேண்டும். இப்படியாக சில வருஷங்கள் பழகிய பிறகு, அவனுடைய ஒவ்வொரு அனுபவமும் ஆன்மீக ஏணியில் ஏறும் ஒவ்வொரு படியாகும். கடைசியாக அவனுக்கு உன்னதமான வெற்றி கிடைக்கும். அவன் சமநிலையுள்ள மனதைப் பெறுவான். முற்றிலும் பற்றற்ற ஒருவனே, மூன்று உலகத்திலும் எல்லோரையும்விட மிகவும் சந்தோஷமான செல்வந்தனாவான். மேலும் அவனே மிகவும்

சக்திவாய்ந்தவனுமாவான். அப்படியிருக்க அவனை இப்பொழுது மாயை எப்படி மயக்க முடியும்?

மருத்துவர்களுக்கு வைராக்கியத்தை வளர்க்க நல்ல சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. குணப்படுத்த முடியாத வியாதியுடைய அனேக நோயாளிகளை அவர்கள் தினமும் பார்க்கிறார்கள். அவர்கள் தினமும் அனேக பிணங்களைப் பார்க்கிறார்கள். இப்படியாக மாயையை, அதனுடைய உண்மை நிலையில் பார்க்க அவர்களுக்கு எண்ணற்ற சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. அவர்கள் இவ்வுலக வாழ்க்கையின் அநித்தியத்தைச் சிறிதும் சந்தேகமின்றி அறிந்து திடமான நம்பிக்கை பெறலாம்.

சிறைச்சாலை அதிகாரிகளும், மற்ற வேலையாள்களும் உண்மையை அறிந்து விடுதலை பெற விரும்பினால், வைராக்கியம் பெற அனேக சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. தண்டனை விதிக்கப்பட்டு கைதியைத் தூக்கிலிடும் காட்சி அவர்கள் கண்களைத் திறக்கும்.

ஹே ஸௌம்யா! உன் மனோநிலை உண்மையில் புகழத்தக்கது. ஒரு சந்நியாசியின் வாழ்க்கைதான் இவ்வுலகத்தில் மிகவும் மேலானது. ஓர் உண்மை சந்நியாசி மூன்று உலகங்களுக்கும் அரசன். முழு உண்மையை நாடுபவன்கூட (சாதகன்) உலகத்திற்கும் மன்னன். "யோகத்தைத் தெரிந்து கொள்ள விரும்பி,. யோகத்தை நாடிச் செல்பவன்கூட பிரம்ம லோகத்தைக் கடந்து செல்கிறான்" என்று கிருஷ்ணபகவான் கூறுகிறார்.

இந்த ஜன்மத்தில் பழுத்துப் பலனடையவிருக்கும், கிடைப்பதற்கரிய நல்ல ஆன்மீக சம்ஸ்காரங்கள்

உன்னிடமிருக்கக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அவை மேலும் வளர்ச்சியும் மலர்ச்சியும் பெற, பாதுகாப்பும் கவனிப்பும் தேவை. ஆகையால் இவ்வுலக மருட்சிகளுக்குட்பட்டு மயங்கிவிடாதே. ஜாக்கிரதையாக இரு. அறிவாளியாக இரு. ஆன்மீகப் பாதையில் புதியவர்கள், உலகியல் புத்தியுள்ளவர்களோடு சேரக் கூடாது. நீ அவர்களுடைய சிநேகத்தைத் தவிர்த்தால், காமத்திற்கு இரையாக மாட்டாய். ஸ்திரமான வைராக்கியம் பெற்று சந்நியாச மார்க்கத்தில் ஸ்தாபிதம் அடையும் வரையில், பிரம்மத்தில் நிலை பெற்றிருக்கும் குருவின் கீழ் ஏகாந்தத்தில் இரு.

அனேக சாதகர்கள் முதலில் அதிக வைராக்கியத்தோடும் ஆர்வத்தோடும் என்னிடம் வருகிறார்கள். ஆனால் அவர்கள் அதே நிலையை அதிக நாள்களுக்கு அல்லது சாதனையின் முடிவு வரையில் காப்பாற்றி வைத்திருப்பதில்லை. சில கஷ்டங்களை எதிர்த்து நிற்க நேரிடும் பொழுது, அவர்கள் பழைய நிலைக்குப் போய்விடுகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்கது. எனவே எதைச் செய்யுமுன்பும் நன்றாக ஆலோசித்துப் பார். நல்ல உறுதியான தீர்மானத்தைப் பெறு. சாதனையின் பலன்களைப் பெற்று உன்னுடைய நோக்கத்தை அடையும் வரையில், சந்நியாச மார்க்கத்தில் உறுதியாக இரு.

இந்தத் தகுதிகளில் ஏதாவது உன்னிடம் இல்லாவிட்டால் இன்னும் மூன்று வருஷங்கள் காத்திரு. வீட்டிலேயே ஆன்மீக சாதனைகள், ஜபம், ஆசனம், பிராணாயாமம், தியானம் முதலியவற்றைப் பயிற்சி செய்து பழகிக் கொள். ஆழ்ந்த அமைதியான

தியானத்தில் மூழ்கு. தன்னலமற்ற சேவையிலும் மூழ்கு. இது மனத் தூய்மைக்கு மிகவும் இன்றியமையாதது. பிரம்மச்சரியத்தைச் சரியாக அனுசரி. புகைப்பிடித்தல், டீ, காப்பி குடித்தல் போன்ற ஏதாவது தீய பழக்கங்கள் இருந்தால், அவற்றை விட்டுவிடு. எல்லா நற்குணங்களையும் வளர்த்துக் கொள். இப்பொழுது உன்னுடைய மனோநிலையின் மாறுதலைத் தெரிந்து கொள். பிறகு என்னிடம் வா. இங்கே வந்து கடினமான, சுறுசுறுப்பான வாழ்க்கை மேற்கொள்ளத் தயாராக இரு.

சில சாதகர்கள் அவசரப்பட்டு வருகிறார்கள். வைராக்கியமில்லாததால் அவர்கள் திரும்பிச் சென்றுவிடுகிறார்கள். இது நல்லதல்ல. ஆகையினாலே தான், இந்த எச்சரிக்கை.

அனேகர் எழுதுதல், பூஜைக்கு வேண்டிய பூ சேகரித்தல், நூல் நிலையத்தில் புத்தகங்களை அடுக்குதல் அல்லது மேற்பார்வை செய்தல் போன்ற சில மேலான வேலைகளைச் செய்ய விரும்புகிறார்கள். ஆனால் தண்ணீர் எடுத்தல், பெருக்குதல், நோயாளிகளின் துணிகளைச் சுத்தம் செய்தல், சமைத்தல், மல ஜலத்தைச் சுத்தம் செய்தல் போன்ற வேலைகளை வெறுக்கிறார்கள். இவ்வித வேலைகளை அவர்கள் இழிவானதாகக் கருதுகிறார்கள். அவர்கள் நிஷ்காம்ய கர்மத்தின் (சுய நலமற்ற சேவையின்) உண்மை தத்துவத்தை அறிந்து கொள்ளவில்லை. அவர்கள் இன்னும் பிரபுக்களே.

அன்பார்ந்த பிரபு! உன்னிடத்தில் மந்த ஆத்மீக எழுச்சியும் வைராக்கியமும் இருக்கின்றன. நீ அவற்றை வளர்க்க வேண்டும். மந்த வைராக்கியமும் வெறும்

மனவெழுச்சிகளும் தியாகப் பாதையில் நிலைத்திருக்க உனக்கு உதவி செய்யமாட்டா. சில காலங்களுக்கு உன் வீட்டை விட்டுத் தனியான இடங்களில் ஓரிரண்டு வாரங்கள் இரு. விசாரம் செய். ஆழ்ந்து ஆராய்ச்சி செய். தீவிரமாக சிந்தி. ஆன்ம சிந்தனை செய். உன் குடும்பத்தாரிடத்தில் உனக்கு ஆசை அல்லது பற்று இருக்கிறதா என்று கண்டுகொள். உன் மனம் இந்திரிய இன்பத்தை நாடிச் செல்கிறதா என்று கண்டுபிடி. உலகியல் வஸ்துகளையும் உறவினரையும், எல்லா சுக போகங்களையும் விட்டு இருக்க முடியுமா என்று நிச்சயம் செய்து கொள். உன்னை முற்றிலும் இவ்வுலகத்திலிருந்து பிரித்துக் கொள்ள முடியுமானால், பிறகே என்னிடம் வா. நான் சிறிது காலத்திற்குள் உன்னை யோகிகளுக்கெல்லாம் பெரிய யோகியாகச் செய்துவிடுவேன். ஓரிரண்டு வருஷங்களுக்குள் ஆன்மீகப் பாதையில் மிகவும் முன்னேறியவர்கள் அனேகம் பேர் இருக்கிறார்கள். நீயும் அதைச் செய்யலாம். எதிர்ப்பில்லாத கீழ்ப்படிதலும், ஆன்மீக குருவின் கட்டளைகளை நம்பிக்கையோடு சிறிதும் தவறாமல் செய்வதுமே உன்னிடமிருந்து எதிர் பார்க்கப்படுகின்றன. இதுவே, ஆன்மீகப் பாதையில் வெற்றி பெறும் இரகசியம்.

அத்தியாயம் 3

# உலக வாழ்க்கையின் துயரங்கள்

## அறியாமையே எல்லாத் துயரங்களுக்கும் காரணம்

கேவலம் தாற்காலிக இன்பத்தைக் கொடுக்கிற நேற்றுச் செய்த காரியங்களையே மறுபடியும் மறுபடியும் செய்கிறோம். அனுபவித்த பொருள்களே மறுபடியும் வருகின்றன. நேற்று பார்க்கப்பட்ட பொருள்களே மறுபடியும் இன்றைக்கு உள்ளன. மிக்க மகிழ்ச்சியோடு நேற்று அணிந்து கொண்ட ஆபரணங்களே மறுபடியும் அணிந்து கொள்ளப் படுகின்றன. இருந்தும், அறிவுள்ளவர்கள்கூட அவற்றிடத்தில் வெறுப்பு கொள்வதில்லை. அவற்றை மீண்டும் மீண்டும் அனுபவிக்க வெட்கம் அடைவதில்லை.

அறியாமை காரணமாக எப்படி குழந்தைகள் கொஞ்ச நேரத்திற்குத் தித்திப்பாக இருக்கும் தின்பண்டங்களை மறுபடி மறுபடி ருசிக்கின்றனவோ, அதேபோல் நீயும் உண்மை மார்க்கத்தை அறியாததால், துன்புறுகிறாய். பகல், இரவு, வாரங்கள், மாதங்கள், வருஷங்கள், யுகங்கள் மாறி மாறிச் செல்கின்றன. ஆனால் ஒன்றும் புதிதாகத் தோன்றுவதில்லை. மூளையைக் குழப்பித் திரளான எண்ணங்களைச் சுழலச் செய்யும் செல்வம், உனக்கு ஆனந்தத்தைக் கொடுக்காது. விரைவில் அழியக்கூடிய, மனதை இணங்கச் செய்யக் கூடிய இந்த செல்வம் பாம்புகளால் சூழப்பட்ட கிணற்றுள் இருக்கும்

கொடியிலுள்ள மலர் மொக்கைப் போல் சிறிதும் பயனற்றது.

**ஒருவரும் வருவதுமில்லை, போவதுமில்லை**

பிராணன்! இலை, தலைகீழாகக் கவிழ்க்கப்பட்டவுடன் அதன் ஓரத்திலிருக்கும் மழைத்துளி கீழே விழுந்து விடுவதுபோல, ஆவி, காலமற்ற காலத்தில் இவ்வுடலைவிட்டுப் பறந்து சென்று விடுகிறது. வாழ்க்கை வெகு விரைவில் அழியக் கூடியது. அது எண்ணெய்யற்ற விளக்கைப் போலும் கடல் அலையைப் போலும் சீக்கிரம் மறையக் கூடியது. தோற்றமும் மறைவும் நாடகத்தின் இரண்டு காட்சிகளைப் போன்றவை. உண்மையில் யாரும் வருவதுமில்லை, போவதுமில்லை.

மறுபிறப்பிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டவர்களின் வாழ்க்கையே உயர்தரமானது, உன்னதமானது. இயற்கையாகவே அழியும் தன்மை யுடையதும் இன்பம் கொடுப்பதில் நிலையற்றதும், நஞ்சைப் போன்ற வாழ்க்கையைவிட வேறு எதுவுமில்லை.

ஆசைத் தீ உன்னை முற்றிலும் பொசுக்கிவிட்டது. இந்த நிலையில், ஓர் அமுத வெள்ளத்தில் ஆழ்ந்த முழுக்குகூட உன் வெக்கையைத் தணித்து உன்னைக் குளிர்ச்சி செய்ய முடியாது. எப்பொழுதும் அதிகரித்துக் கொண்டேயிருக்கும் இந்த ஆசைகளே, மிகவும் துன்பகரமான இறப்பு பிறப்பிற்குக் காரணம். தசையாலும், குடலாலும், சிறுநீராலும், மலத்தாலுமாக்கப் பட்டு, அனேக மாறுதல்களுக்குட்பட்டு, ஒரு நேரம் மெலிந்தும் மற்றொரு சமயம் பருத்துமிருக்கும்

இவ்வுடல், கேவலம் துன்பத்தை அனுபவிப்பதற்கே இவ்வுலகத்திலிருக்கிறது. சதை, எலும்பு, இரத்தம் முதலியவற்றாலாக்கப்பட்டு அழுகும் தன்மையோடு கூடி, செல்வந்தரிலும் ஏழையிலும் ஒரே தன்மையாயுள்ள, வளர்ந்து அழியக் கூடிய இவ்வுடலில் அனுபவிப்பதற்குரிய அழகு என்ன இருக்கிறது?

மூன்று தடங்கள்

ஒரு பக்கத்தில் தேள் கடி மற்றொரு பக்கத்தில் பாம்புக் கடி ஒரு பக்கத்தில் ஈ, தெள்ளுப்பூச்சி, மூட்டைப் பூச்சி, கொசு மற்றும் வேறு பூச்சிகளும் முட்களும் துன்புறுத்துகின்றன. வெய்யிற் காலத்தில் சூரியன் வாட்டுகிறது. குளிர்காலத்தில் குளிர் நடுக்குகிறது. இன்புளுயன்ஸா, பிளேக், அபென்டிஸிடிஸ், பையோரியா, பெரியம்மை போன்ற நோய்கள் உன்னை விழுங்கக் காத்துக் கொண்டிருக்கின்றன. மேலும் அத்யாத்மிகம் அதிதெய்விகம் அதிபௌதிகம் எனப்படும் மூன்று விதத் தாபங்கள் இருக்கின்றன. பயம், மருட்சி, துயரம், துக்கம், துன்பம் இவை ஒவ்வொரு கணமும் கொல்லுகின்றன.

ஆசை, கோபம், பொறாமை, பகைமை, கவலை, தொல்லை முதலியவை ஒவ்வொரு கணமும் வேதனை செய்கின்றன. மிகவும் அன்போடு நேசிக்கப் பட்டவர்களின் பிரிவு, தாள முடியாத அதிர்ச்சியைக் கொடுக்கிறது. இருந்தும் நீ இந்தப் பொய்யான உலக வாழ்க்கையின் சிற்றின்பங்களை ஒருபொழுதும் துறக்க மாட்டாய். இந்திரிய இன்பங்கள் அவ்வளவு ஆழ்ந்த தன்மையுடையன. "நான் சக்தி வாய்ந்தவன், நான் மிகவும் புத்திசாலி, நான் எதையும் செய்து விடுவேன்.

கடவுளே கிடையாது" என்று நீ அகங்காரம் மேலிட்டுப் பேசுவாய். நீ உன் நீண்ட கூர்மையான மீசையை முறுக்குவாய். ஆனால் ஒரு தேள் நன்றாகக் கொட்டும்பொழுது "ஓ நாராயணா, நாராயணா, நாராயணா, என்னைக் காப்பாற்றுங்கள். இந்தக் கடுமையான வலியிலிருந்து என்னை விடுவியுங்கள்" என்று அலறியழுவாய்.

தலைமுடி நரைத்துவிட்டால் அனேக விதத் தைலங்களைக் கண்டுபிடிக்கிறாய். இழந்த இளமையைத் திரும்பிப் பெற விதவிதமான முயற்சிகள் செய்யப்படுகின்றன. பற்கள் விழுந்துவிட்டால் புதிய செயற்கைப் பற்களைக் கட்டிக் கொள்கிறாய். "மேலும் வாழ்ந்து அனுபவிக்க வேண்டும்" என்னும் ஆசையை நீ ஒருபொழுதும் விடமாட்டாய். இழிவான உதவாக்கரை! பயனற்ற பதர்!

ஆழ்ந்து ஆய்வுசெய். தீவிரமாக யோசி. நன்றாக நினை. இடைவிடாது சத்சங்கத்திலிரு. நாட்டிற்கும் மக்களுக்கும் சுயநலமற்ற சேவை செய். முக்தி பெறும் நான்குவித மார்க்கத்தைப் பின்பற்று. பகவத்கீதை, யோக-வாசிஷ்டம், சங்கரருடைய விவேக சூடாமணி முதலியவற்றைப் படி. கற்றறிந்த சந்நியாசிகளைப் பணிந்து உன் சந்தேகங்களைத் தீர்த்துக் கொள். சிரவணம், மனனம், நிதித்தியாசனம் ஆகியவற்றை நன்றாகப் பழகு. அறியாமையாகிய திரையை அகற்றி, உன்னுடைய இயற்கைத் தன்மையாகிய சச்சிதானந்தத்தில் அமைதியடை. ஆத்மா பார்க்கப்பட்டு, கேட்கப்பட்டு, நினைக்கப்பட்டு, ஆழ்ந்து சிந்திக்கப்பட வேண்டும்.

மதிப்பு, மரியாதை, பட்டம், பெயர், புகழ், சக்தி, பதவி முதலியவற்றைத் துற. இவை ஒன்றிற்கும் உபயோகமற்றவை. உனக்கு இவை நிரந்தர திருப்தியைக் கொடுக்கமாட்டா. இவை உன்னுடைய பற்றையும் பகட்டையும் அதிகப்படுத்தும். இவை மனதிற்கு வெறியுண்டாக்குபவை. இவை துன்பத்தையும் மனக்குழப்பத்தையும் கொடுக்கும். ஆகையினாலேதான் ராஜா பர்த்துருஹரி, ராஜா கோபீசந்து, பகவான் புத்தர் முதலியோர் தங்கள் ராஜ்யம், செல்வம், புகழ், முதலியவற்றைத் துறந்தார்கள். அவர்கள் இவற்றை யெல்லாம் துச்சமாகப் பாவித்தார்கள்.

### வாழ்க்கையின் நிலையின்மை

நீ இறந்த பிறகு உன்னுடைய நல்வினை தீவினைகளே உன்னைத் தொடர்ந்து வரும். கடவுள் உன்னை உன்னுடைய செயல்களுக்கேற்றபடி மதிப்பிடுவார்.

வெளி வஸ்துகளிடத்திலுள்ள கவர்ச்சி அற்றுப் போகிறது. ஆனால் த்ரஷ்ணம் எனப்படும் உட்பற்று அல்லது மனப்பற்று மட்டும் இன்னும் இருந்து கொண்டேயிருக்கிறது. ஆகையினாலேதான் "ஆன்மீக வாழ்க்கை நடத்தும் ஒருவனிடமிருந்து விஷய வஸ்துகள் நீங்கி விடுகின்றன, விருப்பம் மட்டும் நீங்குவதில்லை. ஆனால் அந்த விருப்பமும், ஆத்மானு பூதியடைந்தவுடன் அற்றுப் போகின்றது." என்று கீதை கூறுகிறது.

நண்பனே! உன் முற்பிறவிகளில் உனக்குண்டான தந்தை, தாய், தாரம், மகன், மகள், மாமா, மாமி இவர்களுக்கு ஒரு கணக்கு உண்டா? இருந்தும்

இப்பொய்யான சம்பந்தமும் பற்றும் உன்னை விட்டபாடில்லை. விவேகம் அல்லது பகுத்தறிவு இன்னும் உதிக்கவில்லை. என்ன பரிதாபம் இது?

சாப்பிடுதல், குடித்தல், தூங்குதல் போன்ற அதே செய்கைகளைத் தினந்தோறும் திரும்பத் திரும்பச் செய்ய, உனக்கு வெட்கமாக இல்லையா? உன் பட்டத்திலும் பதவியிலும் நீ கர்வம் அடைகிறாய். நீ உன் வாழ்க்கையைச் சற்றேனும் உயர்த்திக் கொண்டிருக்கிறாயா? இப்பொழுது நடந்த பீகார், குவெட்டா பூகம்பங்களிலிருந்து நீ என்ன அறிந்து கொண்டாய்? எல்லா ஆசைகளும் த்ரஷ்ணங்களும் அறவே அற்றுப் போகும் அழியாத வீட்டைப் பெற நீ முயற்சி செய்கிறாயா? அமரத்துவம், ஆனந்தம், அமைதி முதலியவற்றைக் கொடுக்கக் கூடிய, வாழ்க்கையின் மகோன்னதமான நோக்கமாகிய ஆத்மானுபூதியைப் பெற நீ முயற்சி செய்கிறாயா?

இப்பொழுது நடந்த பீகார் பூகம்பத்தில், ஒரு பெரிய 'வங்கி' முதலாளி தன்னையும் தன் குடும்பத்தையும் பட்டினியிலிருந்து காப்பாற்றிக் கொள்ள முக்கால் அணாவிற்காக பிச்சையெடுக்க நேர்ந்தது. ஒரு பண்டிதர் சிறிது சிறிதாகப் புத்தகங்கள் விற்று அதன்மூலம் 25 ஆயிரம் ரூபாய் சேர்த்திருந்தார். ஆனால், அவர் தன் ஆஸ்த்துமா நோயைத் தீர்த்துக் கொள்ள அப்பணத்தைக் கொஞ்ச காலத்திற்குள் செலவிட நேர்ந்தது. அவர் எல்லாவித மருந்துகளையும் சாப்பிட்டுப் பார்த்தார். ஆனால், ஒன்றும் குணமளிக்கவில்லை. கடைசியில் தன் வீட்டை விட்டுத் தனிமையான ஓர் இடத்தில் ஒரு துறவி போல் வாழ நேர்ந்தது.

இங்கு வாழ்க்கை மிகவும் நிலையற்றது. அனேகவித நோய்கள் உடலைத் தாக்குகின்றன. இருந்தும், மனிதன் கண்மூடித்தனமாக இந்த அநித்திய வாழ்க்கையைப் பற்றி நிற்கிறான்! அவன் உண்மையை மறந்து விடுகிறான். ஓ மனிதா, மனதைத் தூய்மைப்படுத்தி ஆழ்ந்த தியானம் பழகி உனக்குள்ளே இருக்கும் ஆன்மாவிலே நிரந்தர அமைதியையும் ஆனந்தத்தையும் தேடு. உன்னை இவ்வுலகத் துன்பங்களாகிய சிக்கல்களிலிருந்து விடுவித்துக் கொள்ள இதுவே நேர்மையான ராஜமார்க்கமாகும். எனவே, ஆன்மீகப் பயிற்சிகளை சீக்கிரமாகவே தொடங்கு. தலைமுடி நரைக்க ஆரம்பித்துவிட்டது. பற்கள் விழ ஆரம்பித்துவிட்டன. இந்திரியங்கள் சக்தியை இழக்க ஆரம்பித்து விட்டன. நீ இளமையாக இருக்கும்போதே ஜபம், தியானம் முதலியவற்றைப் பழகு. வேலையிலிருந்து ஓய்வுபெறும் முதுமைக் காலத்தில் உன்னால் ஒன்றும் செய்ய முடியாது.

தூய்மையோடும் அமைதியோடும் கூடிய மனதைப் பெறுவது மிகவும் கடினம். ஆனால் நீ யோகத்திலும் தியானத்திலும் முன்னேற விரும்பினால், அத்தகைய மனதைப் பெற்றே தீர வேண்டும்.

பகவான் புத்தர் தன் குழந்தைப் பருவத்திலிருந்தே விவேகம் பெற்றிருந்தார். எல்லா ஜீவராசிகளும் துன்பத்தில் மூழ்கியிருக்கும் தன்மை பற்றியும் துயரங்களைப் பற்றியும் இவ்வுலக வாழ்க்கையின் எல்லா நிலைமைகளின் அநித்தியத் தன்மையைப் பற்றியும் இளமையிலிருந்தே நன்றாக அறிந்திருந்தவர்களில் புத்தர் ஒருவர். நீயும் மற்றொரு புத்த பகவானாக ஆகமாட்டாயா?

நீ தினமும் எட்டு மணி நேரத்தைத் தூக்கத்தில் கழிக்கிறாய். மீதி நேரத்தை வம்பளப்பதிலும் பொய் சொல்வதிலும் பிறரை ஏமாற்றுவதிலும் சுயநலச் செய்கைகளிலும் செல்வத்தைச் சேகரிப்பதிலுமே வீண் செய்கிறாய். தினமும் அரை மணி நேரமாவது பகவானுடைய திருப் பெயரைப் பாடுவதிலும், தியானம் செய்வதிலும், சேவை செய்வதிலும் கழிக்காவிட்டால், நீ எப்படி ஆன்மீக முன்னேற்றம், அமரத்துவம், பேரின்பம் முதலியவற்றை எதிர்பார்க்க முடியும்?

## மொத்தத்தில் வாழ்க்கை துன்பகரமானது

"மொத்தத்தில் வாழ்க்கை துன்பகரமானது" என்று பகவான் புத்தர் சொல்கிறார். பதஞ்சலி யோக சூத்திரத்திலும் இதன் எதிரொலியைக் காணலாம். "*ஸர்வம் துக்கம் விவேகினஹ:*" 'விவேக முள்ளவனுக்கு எல்லாம் துன்பகரமானது'. எல்லாவற்றிலும் நன்மையைக் காண்பவர்களின் மனப்பான்மை இதுவல்ல. எதிலும் குற்றத்தையே காணும் இம்மனப்பான்மை, ஆழ்ந்த வைராக்கியத்தைத் தூண்டுவதால் மனதை இந்திரிய போகங்களிலிருந்து மாற்றி கடவுளிடம் செலுத்தி அழியாத, அளவுகடந்த ஆனந்தத்தையும் பெறச் செய்கிறது.

"மாமிசத்தைத் தின்பதில் தனக்குள்ள ஆசையால், எவ்விதம் மீனானது அடியிலிருக்கும் கொக்கியைக் காண்பதில்லையோ, அதேபோல் இந்திரிய இன்பத்தைப் பெறுவதில் தனக்குள்ள ஆசை மிகுதியால் மனிதன் யம பாசத்தைக் காண்பதில்லை.

த்ரிஷ்ணம் என்பது தீவிர புலனாசை அல்லது விஷயப் பற்று. ஒரு வஸ்துவைத் திரும்பத் திரும்ப

அனுபவிப்பதன் மூலம் அந்த வஸ்துவிடத்திலுள்ள பற்று மிகவும் தீவிரமாகி விடுகிறது. இதுவே த்ரிஷ்ணம் எனப்படும்.

ஆக்ஸ்போர்டு அல்லது கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் ஒரு பெரிய ஆராய்ச்சியாளராக ஆகி எம்.ஏ., பிஎச்.டி. பட்டம் பெறுவது மிகவும் எளிது. ஆனால் த்ரிஷ்ணத்தை அறவே அழிப்பது மிகவும் கடினமானது. இக்காரணத்தை முன்னிட்டே ஸ்ரீவியாசர் ஸ்ரீராமனை நோக்கி, "நீ இமயமலையை வேருடன் பெயர்த்துவிடலாம், சமுத்திரத்தின் நீரைக் குடித்துவிடலாம். நெருப்புப் பந்துகளை விழுங்கலாம். ஆனால் த்ரிஷ்ணங்களை அழிப்பது மிகவும் கஷ்டம். பற்று அனேகவிதங்களில் தீராத் தொல்லைகளை உண்டு பண்ணுகிறது. இப்பற்றுகளே இச்சம்சாரத்திற்கு மூலகாரணம்" என்று கூறுகிறார். (யோக வாசிஷ்டம்)

உலகப் பற்றுள்ளவன் எப்பொழுதும் துன்பங்களிலேயே மூழ்கியிருக்கிறான். அவன் எப்பொழுதும் பணம், பதவி அல்லது வேறு எதையாவது அடைவதற்கே கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான். அவை கிடைக்குமா அல்லது கிடைக்காதா என்று அவன் எப்பொழுதும் கவலைப்படுகிறான். அவன் அவ்வளவு அதிகமாக விரும்பிய பொருள்கள் கிட்டியிருக்கும்போதுகூட, அவை தொலைந்து போகாமலிருக்க வேண்டுமே என்று கவலைப்படுகிறான். பணம் சம்பாதிப்பது கஷ்டம். அப்பணம் குறையும்போது அதைவிட அதிகக் கஷ்டம். அது தொலையும்போது ஒருவனுக்கு எவ்வளவு கஷ்டத்தையும் மனோ வேதனையையும் கொடுக்கு மென்று சற்று யோசித்துப் பார். ஆகையால்,

பணத்தைத் துறந்து ஆனந்தமய ஆன்மாவில் அமைதியடை.

வெளிச்சமிருக்குமிடத்தில் இருள் இருக்க முடியாது. இந்திரிய இன்பமிருக்குமிடத்தில் ஆன்மீக ஆனந்தத்தைக் காண முடியாது. உலகியல் பற்றுடையவர்கள் இந்திரிய இன்பத்தையும் ஆன்மீக ஆனந்தத்தையும் ஒரே நேரத்தில் ஒன்றாக எதிர்பார்க்கிறார்கள். இது ஒருக்காலும் இயலாதது. அவர்கள் இந்திரிய இன்பத்தைத் துறக்க விரும்புவதில்லை. உண்மையான வைராக்கியத்தை வளர்க்க அவர்கள் முழுமனதோடு பாடுபடுவதில்லை. அவர்கள் அதிகம் பேசுவதோடு சரி.

எந்த நேரத்திலும் இறந்து போவோம் என்று ஒருவனுக்குத் தெரிந்திருந்தும்கூட, எப்பொழுதும் உயிர் வாழ்வோம் என்று அவன் நினைக்கிறான். இறக்கும் வரையில் மாயையின் வலையிலேயே சிக்குண்டிருப்ப தானது மடமையைத் தவிர வேறொன்றுமில்லை. எவன் மனைவி, செல்வம், மக்கள் இவற்றிடத்தில் பற்றுள்ளவனாக இருக்கிறானோ அவன் ஆன்மீகப் பாதையில் சிறிதுகூட முன்னேற்றமடைய மாட்டான்.

உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரை காமத்தால் நிரம்பியிருக்கும் மணமாகாத ஒருவன் தனக்கு மனைவியில்லாததால்தான் துன்புறுவதாக நினைக்கிறான். உலக வாழ்க்கையில் சோர்ந்து போய் களைப்படைந்திருக்கும் குடும்பஸ்தன், மனைவியும் மக்களும் தன் ஆன்மீக முன்னேற்றத்திற்கு மிகுந்த தடையாக இருப்பதாக நினைக்கிறான்.

மனைவி, மக்கள், சொத்து மற்றும் எல்லாவற்றையும் ஒருவன் துறக்கலாம். ஆனால்

பெயரையும் புகழையும் துறப்பது மிகவும் கடினமானது, அரிது. ப்ரதிஷ்டை என்பது ஸ்தாபிதம் அடைந்த பெயரும் புகழும். இது ஆத்மானுபூதிக்கு மிகப் பெரிய தடை. இது கடைசியில் வீழ்ச்சியைக் கொடுக்கிறது. இது சாதகர்களை ஆன்மீகப் பாதையில் முன்னேற விடுவதில்லை. அவன் பெயருக்கும் புகழுக்கும் மரியாதைக்கும் அடிமையாகிவிடுகிறான். கொஞ்சம் தூய்மையும் முன்னேற்றமும் அடைந்தவுடன் மக்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு மரியாதை செலுத்த ஆரம்பித்து விடுகிறார்கள். அவன் கர்வமடைகிறான்.

தன்னை ஒரு பெரிய மகாத்மாவாக எண்ணிக் கொள்கிறான். கடைசியில் தன்னைப் பாராட்டியவர் களின் அடிமையாகிவிடுகிறான். தன் மெதுவான வீழ்ச்சியை அவனால் அறிந்து கொள்ள முடிவதில்லை. அவன் குடும்பஸ்தர்களுடன் தடையின்றிப் பழக ஆரம்பித்தவுடன், தான் எட்டு பத்து வருஷங்களாகத் தீவிர சாதனை செய்து பெற்ற சிறிது முன்னேற்றத்தையும் இழக்கிறான். அவனால் இப்பொழுது முன்னைப் போல் பிறரை வசப்படுத்த முடிவதில்லை. அவனைப் பாராட்டியவர்களும் அவனை விட்டு விலகி விடுகிறார்கள். ஏனெனில் அவனுடைய சங்கத்தில் அவர்களுக்கு உண்மையான சாந்தியும் ஆன்மீக செல்வாக்கும் ஏற்படுவதில்லை.

அந்த மகாத்மா சித்திகளைப் பெற்றிருப்பதாகவும், அவருடைய அனுக்கிரகத்தால் குழந்தைகளும் செல்வமும் பெறலாமென்றும், இமயமலை மூலிகைகளால் நோய்களைப் போக்கடித்துக் கொண்டு நல்ல அழகான சரீரத்தைப் பெறலாமென்றும் அவர்கள் நினைக்கிறார்கள். அவர்கள் எப்பொழுதும் மறைந்த

சுயநல ஆசைகளுடனேயே சாதுவை அணுகுகிறார்கள். தீய சகவாசத்தால் சாதகன் தன் வைராக்கியத்தையும் விவேகத்தையும் இழக்கிறான். அவன் மனதில் ஆசைகளும் பற்றுகளும் அதிகரிக்கின்றன. ஆகையால் நீ உன்னை எப்பொழுதும் மறைத்துக் கொள்ள வேண்டும். நீ எவ்விதமான சாதனை செய்கிறாய் என்று யாருக்கும் தெரியக் கூடாது. உன்னுடைய சித்திகளையும் சக்திகளையும் பிறருக்குக் காட்ட முயற்சி செய்யக் கூடாது. நீ மிகவும் எளிமையாக இருக்க வேண்டும். நீ ஒரு சாதாரண மனிதனாக நடந்து கொள்ள வேண்டும். நீ குடும்பஸ்தர்களிடமிருந்து ஒருவித பரிசும் பெற்றுக்கொள்ளக் கூடாது. பரிசு கொடுப்பவர்களுடைய தீய எண்ணங்கள் உன்னைப் பாதிக்கும். நீ பிறரைவிட உயர்ந்தவனென்று ஒரு பொழுதும் நினைக்கக்கூடாது. நீ பிறரை வெறுக்கவோ புறக்கணிக்கவோ கூடாது. நீ எப்பொழுதும் பிறரை மரியாதையுடனும் மதிப்புடனும் நடத்த வேண்டும். பிறகுதான் மதிப்பு தானாகவே வரும். நீ மதிப்பு, புகழ், பெயர், மரியாதை ஆகியவற்றை, சாணம் போலும் விஷம் போலும் பாவிக்க வேண்டும். அவமரியாதையையும் அவமதிப்பையும் பொன் ஆபரணங்களாக அணிந்து கொள்ள வேண்டும். பிறகே நீ வாழ்க்கையின் லட்சியத்தை நிச்சயமாகவும் உறுதியாகவும் அடைவாய்.

**இந்தக் கஷ்டம் ஏன்?**

ஆசிரமங்கள் கட்டுவதும் சிஷ்யர்களை ஏற்படுத்திக் கொள்வதும் சாதகர்களுக்கு வீழ்ச்சியை ஏற்படுத்துகிறது. ஆத்மானுபூதியடைவதில் இவை யெல்லாம் இடையூறுகள். சாதகனும் மற்றொருவித

குடும்பஸ்தனாகி விடுகிறான். அவனுக்கு ஆசிரமப் பற்று உண்டாகிறது. பிறகு ஆசிரமத்தை எப்படி நடத்துவது, பத்திரிகைகளை எப்படி நடத்துவது, சிஷ்யர்களுக்கு எப்படி உணவளிப்பது போன்ற அனேக கவலைகள் ஏற்படுகின்றன. அதனால் ஒருவித அடிமை மனப்பான்மை வளர்கிறது. சாகும் தறுவாயில் இருக்கும்போதுகூட ஆசிரமத்தின் எண்ணங்கள் அவன் மனதில் உழல்கின்றன.

சில ஆசிரமங்கள், அதன் ஆன்மீகத் தலைவர்கள் உயிரோடிருக்கும் வரையில் மிக நன்றாக நடத்தப்படுகின்றன. அவர்கள் சென்ற பிறகு, குறுகிய மனப்பான்மையுடைய சிஷ்யர்கள் நீதிமன்றங்களில் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்கின்றனர். இதைப் போன்ற அனேக வழக்குகள் நடப்பதை நீ பார்க்கலாம். ஆசிரமம் ஒரு போர்க்களமாகிறது. ஆசிரம சொந்தக்காரர்கள் அடிக்கடி நன்கொடையாளர்களைப் புகழ்ந்து நிதி திரட்ட வேண்டியிருக்கிறது. பணத்தைச் சேகரிப்பதிலும் தன் ஆசிரமத்தை வளர்ப்பதிலுமே மனம் ஈடுபட்டிருக்கும்போது கடவுளைப் பற்றிய எண்ணம் அவன் மனதில் எப்படி இருக்க முடியும்? "நாங்கள் மக்களுக்கு அனேக விதங்களில் நன்மை செய்கிறோம். தினமும் சமய வகுப்புகள் நடத்துகிறோம். ஏழைகளுக்கு உணவளிக்கிறோம். சமயப் பற்றுள்ள மாணவர்களுக்குப் பயிற்சியளிக்கிறோம்" என்று முன்பே ஆசிரமங்கள் ஆரம்பித்து நடத்துபவர்கள் சொல்லலாம்.

ஒரு ஜீவன்முக்தனால் அல்லது ஆத்மானுபூதியடைந்த சுயநலமற்ற யோகியால் நடத்தப்படும் ஆசிரமம், ஆன்மீக ஆற்றலைப் பரப்பும்

ஒரு சக்திவாய்ந்த நிலையம் என்பது உண்மையே. அது அனேக கோடி மக்களுக்கு ஆன்மீக முன்னேற்றத்தைத் தருகிறது. அப்பேர்ப்பட்ட ஆசிரமங்கள் நாட்டிற்கு மிக அதிக ஆன்மீக நன்மையைச் செய்ய முடியும். ஆனால் இத்தகைய நோக்கத்துடன் திறமையோடு நடத்தக்கூடிய சிறந்த ஆன்மீகத் தலைவர்களையுடைய ஆசிரமங்கள், இக்காலத்தில் மிக அரிது! அனேக விதங்களில் பணம் வசூலிக்கப்படுகிறது. கொஞ்சம் பணம் நல்ல விஷயங்களில் செலவு செய்யப்படுகிறது. மிகுதிப் பணம் ஆசிரமத்தை ஏற்படுத்தியவர்களின் சௌகரியத்திற்கும், சுகத்திற்கும், அவருடைய பிரிய சிஷ்யர்களுக்கும் உபயோகப்படுத்தப்படுகிறது.

ஆசிரமத்தை ஏற்படுத்தியவர்கள் நாளடைவில் அவர்களையறியாமலேயே பூஜைக்கும் வழிபாட்டிற்கும் அடிமைகளாகிவிடுகிறார்கள். மாயை விதவிதமாக வேலை செய்கிறது. தங்களுடைய சரணாம்ருதத்தை மக்கள் பருக வேண்டுமென்று அவர்கள் மிகவும் ஆசைப்படுகிறார்கள். தன்னை அவதார புருஷனாக எண்ணி வழிபட வேண்டுமென்ற மனோ பாவமுள்ளவன், பொது மக்களுக்கு எப்படிச் சேவை செய்ய முடியும்? ஊழியர்கள் குறுகிய மனப்பான்மை யுடையவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் மிகச் சிறிய விஷயங்களுக்கெல்லாம் தங்களுக்குள்ளே சண்டையிட்டுக் கொண்டு, ஆசிரமத்தின் அமைதியான சூழ்நிலையைக் கெடுக்கிறார்கள். பின் ஆசிரமத்தில் எப்படி அமைதியிருக்கும்? இந்த நிலைமையில் ஆசிரமத்தைப் பார்க்க வருபவர்கள் அங்கே எப்படி சாந்தத்தை அனுபவிக்க முடியும்?

ஆசிரமத்தை ஏற்படுத்துபவர்கள் வெளியிலிருந்து தினமும் பிச்சை பெற்று வாழ வேண்டும். ஆசிரமத்திற்குத் தலை மேல் தண்ணீர்க் குடத்தைச் சுமந்து, வெளியிலிருந்து பெற்ற பிச்சையிலே வாழ்ந்த ரிஷிகேசத்து காளிகம்பளிவாலாவைப் போல் அவர்கள் முற்றிலும் எளிய சுய தியாக வாழ்க்கையை மேற்கொண்டு நடத்த வேண்டும். அத்தகையவர்களே உண்மையில் மக்களுக்கு நன்மை செய்ய முடியும். ஆசிரம ஸ்தாபகர்கள் ஒருபொழுதும் நிதிக்காக யாசிக்கக் கூடாது. அது சந்நியாசத்திற்கே அபகீர்த்தியை ஏற்படுத்துகிறது. அது மற்றொரு விதமான மரியாதையோடு கூடிய யாசித்தல் ஆகும். யாசிக்கும் பழக்கம் அறிவின் நுண்ணிய கூரிய உணர்ச்சியை அழித்துவிடுகிறது. மேலும் அடிக்கடி நிதி திரட்டுபவர்கள் அதைக் கொண்டு என்ன செய்கிறார்கள் என்று அவர்களுக்கே தெரியாது.

ஆசிரமத்திற்கு வேலை செய்ய நல்ல ஊழியர்கள் கிடைப்பது மிகவும் கடினம். உன்னிடத்தில் வலிமை வாய்ந்த ஆன்மீக சக்தியும், பணமும், ஊழியர்களும் இல்லாதபோது நீ ஏன் ஆசிரமம் கட்டுவதில் உன்னைக் கஷ்டப்படுத்திக் கொள்கிறாய்? சும்மா இரு. அமைதியாகத் தியானம் செய்து உன்னை உயர்த்திக் கொள். உன் வேலையைப் பார்த்துக் கொள். நீயே பார்வையற்றவனாக இருக்கும்போது, நீயே இருளில் தடுமாறும்போது, நீ எப்படிப் பிறருக்கு உதவி செய்ய முடியும்? ஓர் அந்தகன் எப்படி மற்றொரு அந்தகனுக்கு வழிகாட்ட முடியும்? இருவரும் பெரிய பள்ளத்தில் விழுந்து கால்களை உடைத்துக் கொள்வார்கள்.

பொதுவாக ஒரு சாதகன் முதலில் தன் சாதனைகளில் மிக ஆர்வமுள்ளவனாக இருக்கிறான். அவன் மிகவும் சுறுசுறுப்பாக இருக்கிறான். அவன் அதிக கவனம் கொள்கிறான். சீக்கிரம் சில நல்ல பலன்களைப் பெறலாமென்று எதிர்பார்க்கிறான். தான் எதிர்பார்த்த நேரத்திற்குள் அவற்றைப் பெறாவிட்டால் அவன் தைரியத்தை இழக்கிறான். அவன் ஊக்கத்தையிழந்து தன் முயற்சிகளைத் தளர்த்துகிறான். தன் சாதனையை முற்றிலும் விட்டு விடுகிறான். சாதனையின் சக்தியிலேயே அவனுக்கு நம்பிக்கை போய் விடுகிறது.

**கவலையும் தொல்லையும்**

மனைவி, ஆடு, மாடு, பொருள், முதலியவற்றைப் பெறுவதற்கு மனிதன் எப்பொழுதும் ஆசைப் படுகிறான். இவை அவனைக் கண்டிப்பாகத் தன்னல முள்ளவனாக்குகிறது. தன்னலம், பந்தத்தை (பற்றை) ஏற்படுத்துகிறது. எங்கு பற்று இருக்கிறதோ அங்கு அகங்காரமும் மமகாரமும் இருக்கின்றன. பிறகு எல்லாத் துன்பங்களும் தலையெடுக்க ஆரம்பிக்கின்றன. இங்கிருந்து மாயைச் சக்கரம் சுழல ஆரம்பிக்கிறது. பிறகு மனிதன் அடிமையாகிறான். அவனுடைய கை கால்கள் கெட்டியான இரும்புச் சங்கிலியால் இணைக்கப்படுகின்றன. சிலந்தி அல்லது பட்டுப் பூச்சியைப் போல் அவன் சிக்குறுகிறான். தன் அழிவிற்குத் தானே ஏற்படுத்திக் கொண்ட பந்தம் இது.

அமைதியான ஓர் அறையில் கொஞ்ச நேரம் தனியாக உட்காரு. ஆழ்ந்து ஆராய்ந்திடு. தீர யோசி. சந்தோஷம் ஒருவித மனோநிலை. அதற்கும், பணம் அல்லது உடைமைகளுக்கும் சம்பந்தமில்லை. மிகவும்

பெரிய பணக்காரர்கள் துன்பப்படுவதையும், ஓர் ஏழை குமாஸ்தா மிகவும் சந்தோஷமாயிருப்பதையும், வெறும் கோவணம் அணிந்த ஒரு சாது ஆனந்தப் பரவசத்தில் கூத்தாடுவதையும் நீ கண்கூடாகப் பார்க்கிறாய்.

போகம், ஆசையைத் திருப்தி செய்ய முடியாது. அதற்கு மாறாக அது ஆசையை அதிக தீவிரமாக்கி, த்ரிஷ்ணத்தை உண்டு பண்ணி, தீயில் விடப்பட்ட நெய், அதை அதிகப்படுத்துவது போல், மனதை மேலும் நிம்மதியிழக்கச் செய்கிறது. தேவைகள் எவ்வெளவுக்கெவ்வளவு கொஞ்சமாக இருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு இன்பம் அதிகம். பால் சிலருக்கு இன்பத்தையும், சிலருக்கு துன்பத்தையும் கொடுக்கிறது. நான்காவது கிண்ணப் பால் அருவருப்பை உண்டாக்குகிறது. காய்ச்சலாக இருக்கும்போது பால் இன்பத்தைக் கொடுப்பதில்லை. ஆகையால், இன்பம் வஸ்துகளிலில்லை. ஆனால் அது மனக் கற்பனையில் அல்லது மனோ நிலையில் இருக்கிறது.

மாம்பழம் இனிப்பாயில்லை, ஆனால் கற்பனை இனிப்பாய் இருக்கிறது. பெண் அழகாக இல்லை, ஆனால் கற்பனை அழகாக இருக்கிறது. அருவருப்பான தோற்றமுள்ள ஒரு பெண், தன் கணவனுக்கு மிகவும் அழகாகத் தோற்றமளிக்கிறாள். ஏனெனில் அவனுடைய கற்பனை அழகாக இருக்கிறது. வஸ்துகளில் ஒரு தினையளவு இன்பமே இருக்கிறது, ஆனால் அதோடு கூடிய துன்பம் மலையளவாக இருக்கிறது.

புலனின்பம் ஆசை காட்டி மோசம் செய்கிறது. மனிதன் பொருள்களைப் பெறாதவரையில் அவற்றில்

மகிழ்ச்சியிருக்கிறது. அவன் அதிகம் பாடுபடுகிறான். அவன் மனம் கவலைகளால் நிரம்பியிருக்கிறது. தான் விரும்பும் பொருள் கிடைக்குமா கிடைக்காதா என்ற சந்தேகத்தில் அவன் அவதிப்படுகிறான். அப்பொருள் கிடைக்க வேண்டியதுதான் தாமதம், அதிலிருந்த வனப்பு போய்விடுகிறது. தான் சிக்கல்களிலிருப்பதை அறிகிறான். மணமாகாதவன் இரவும் பகலும் தன் கல்யாணத்தைப் பற்றியே நினைக்கிறான். மணமான பிறகு தான் சிறையிலிருப்பதாக உணர்கிறான். தன் மனைவியின் எல்லை மீறிய தேவைகளைப் பூர்த்தி செய்ய அவனால் முடிவதில்லை. தன் வீட்டிலிருந்து காட்டிற்கு ஓடிப்போக விரும்புகிறான். குழந்தையில்லாத ஒரு செல்வந்தன், தனக்கு ஒரு மகன் பிறந்தால் தான் மேலும் சந்தோஷமாக இருக்கலாமென்று நினைக்கிறான். இரவு பகலாக, குழந்தை பெற வேண்டுமென கவலைப்படுகிறான். இராமேசுவரத்திற்கும், காசிக்கும் யாத்திரை சென்று அனேகவித தார்மிகச் சடங்குகளைச் செய்கிறான். ஆனால் அவனுக்குக் குழந்தை பிறந்ததும் அவன் துன்புறுகிறான். குழந்தை, வலிப்பு நோயால் வாடுகிறது. அவனுடைய பணம், மருத்துவத்தில் செலவிடப்படுகிறது. பிறகும் குணம் உண்டாகுவதில்லை. இது மாயையின் மயக்கம். இவ்வுலகம் முழுவதும் மயக்கத்தில் மூழ்கி இருக்கிறது.

பொருள்கள் கிடைக்காதபோது நீ துன்பம் அடைகிறாய். டீ குடிக்கும் பழக்கமுள்ளவனும், சாப்பாட்டிற்குப் பிறகு பாலும் பழமும் சாப்பிடும் பழக்கமுள்ளவனும், அவை கிடைக்காத இடத்தில் மிகவும் கஷ்டப்படுகிறான். கோபத்தால் தன் மனைவியையும் வேலைக்காரனையும் கண்டபடி

திட்டுகிறான். மனைவி இறந்த பிறகு கணவன் துன்பத்தில் ஆழ்கிறான். தன் அன்பார்ந்த மனைவியை இழந்துவிட்டோமே என்பதாலல்ல, ஆனால் தனக்கு இனி சிற்றின்பம் கிடைக்காதே என்பதால், துன்பத்திற்குக் காரணம் இன்பம். மரணத்திற்குக் காரணம் இந்திரிய வாழ்க்கையிலுள்ள ஆசையே. உனக்குத் துன்பமே வேண்டாமென்றால், எல்லா இந்திரிய இன்பங்களையும் விட்டுவிடு. நீ இறக்க விரும்பாவிட்டால், இந்திரிய வாழ்க்கையை விடு.

பத்து வயதிலேயே மூக்குக் கண்ணாடி போட்டுக் கொள்ளல், கடிகாரம் கட்டிக் கொள்ளல், கடன் வாங்கி கார் வாங்குதல், ஆடம்பர உடை அணிந்து தொப்பி மாட்டிக் கொள்ளல், 'நேவிகட்' சிகரெட் பிடித்தல், மணிலா சுருட்டுப் பிடித்தல், கழுத்தில் இறுக 'டை' கட்டிக் கொள்ளல், கடற்கரையோரமாக மனைவியோடு கைகோர்த்துக் கொண்டு உல்லாசமாக உலாவுதல், பாக்கெட்டில் செய்தித்தாள் வைத்துக் கொள்ளல், மேலுதட்டின் நடுவில் முறுக்கிவிட்ட 'கைசர்' மீசை வைத்துக் கொள்ளல், மாமிசம் சாப்பிடுதல், பிராந்தி குடித்தல், சீட்டு விளையாடுதல், சூதாடுதல், நடனமாடுதல், கடன் வாங்கி சினிமா பார்த்தல் - சுருங்கச் சொல்லின் சிதறிய ஒழுங்குகெட்ட வாழ்க்கை நடத்துவது - இதுவே நவ நாகரீகம்! நாகரீகமும் பகட்டும் உன்னைப் பெரிய பிச்சைக்காரனாக்கி விட்டது.

**விருப்பும் வெறுப்பும்**

மனதின் இரண்டு ஓட்டங்களாகிய (வேகங்கள்) ராகத் துவேஷங்களே உண்மையில் இவ்வுலகம் அல்லது சம்சாரமாகும். இன்பப்

பொருள்களிடத்திலுள்ள கவர்ச்சியால் மனம் அவற்றிடத்தில் மிகவும் பற்றுக் கொள்கிறது. ஏனெனில் அதற்கு இன்பம் கிடைக்கிறது. எங்கெங்கு இன்பத்தின் நுகர்ச்சி இருக்கிறதோ, அவ்வின்பத்தைக் கொடுக்கும் பொருள்களிடத்தில் மனம் பசைபோல் ஒட்டிக் கொள்கிறது. இதுவே பற்று என்று சொல்லப்படுகிறது. இதுவே பந்தத்தையும் துன்பத்தையும் கொடுக்கிறது. அப்பொருள் இல்லாமற் போனால் அல்லது அபகரிக்கப்பட்டால், மனம் தாங்க முடியாத துன்பத்தை அடைகிறது. மானிடக் கஷ்டங்களுக்கெல்லாம் மூலகாரணம் கவர்ச்சியே. மனம் துன்பத்தைக் கொடுக்கும் பொருள்களிலிருந்து விலகிக் கொள்கிறது. மனதில் வெறுப்பு ஏற்படுகிறது. உதாரணமாக, ஒருவரும் நல்ல பாம்பு, புலி அல்லது தேளை விரும்புவதில்லை. கவர்ச்சியும் இன்பமும், வெறுப்பும் துன்பமும் ஒருங்கே காணப்படுகின்றன. அழிவூட்டும் இப்பெரிய இரண்டு சக்திகளுக்கு உலகியல் பற்றுள்ளவன் அடிமையாக இருக்கிறான். வைக்கோல் துரும்பைப் போல் அவன் இங்கு மங்கும் வீசியெறியப்படுகிறான். இன்பம் கிடைக்கும்போது அவன் சிரிக்கிறான், துன்பம் வரும்போது அவன் அழுகிறான். இன்பப் பொருள்களை அவன் பற்றி நிற்கிறான்; துன்பத்தைக் கொடுக்கும் பொருள்களிலிருந்து அவன் விலகிக் கொள்கிறான்.

புலனின்ப ஆசை எல்லோருடைய மனதிலும் ஆழ்ந்து பதிந்திருக்கிறது. இராஜசீக மனதால், சிறிது நேரத்திற்குக்கூட ஏதாவது ஒருவித இன்பத்தைப் பற்றிய எண்ணம் இல்லாமல் இருக்கவே முடியாது. அனேகவிதமான நுட்பமான போகங்களை மக்கள் கண்டுபிடித்துக் கொண்டே இருக்கிறார்கள். புதிய

புதிய விதமான அதிசய இன்பங்களைத் தற்கால விஞ்ஞானம் கண்டுபிடித்துக் கொண்டே இருக்கிறது. நவநாகரீகம், புலனின்பத்தின் மற்றொரு பெயரே. ஓட்டல்கள், சினிமாக்கள், விமானங்கள், ரேடியோக்கள் முதலியவை புலனின்பத்தை அதிகப்படுத்துகின்றன. தன் நாக்கைத் திருப்தி செய்வதற்காக மனிதன் புதுவித உணவுகளையும் சிற்றுண்டிகளையும் குடிபானங் களையும் கண்டுபிடிக்கிறான். வருஷத்திற்கு வருஷம் உடையின் நாகரீகம் மாறிக் கொண்டே போகிறது. அதேபோல் தலைமுடி வைத்துக் கொள்வதிலும். ஆன்மீகப் பாதையில் சாதனை செய்பவர்களும், தங்களுடைய யோகப் பயிற்சிகளால் அழிவில்லாத தீவிர புலனின்பத்தைப் பெற விரும்புகிறார்கள். அவன் புஷ்பக விமானத்தில் செல்ல ஆசைப்படுகிறான். இந்திரன் முதலிய தேவர்களோடு கற்பக விருட்சத்தின் கீழ் அமரத்துவமாகிய அமிர்தத்தைப் பருக விரும்புகிறான். தேவ, கந்தர்வ அணங்குகளின் நடனத்தையும் கீதத்தையும் கேட்டனுபவிக்க விரும்புகிறான். இவையெல்லாம் மிக நுட்பமான மயக்கங்கள், மருட்சிகள். உண்மையான சாதகன் இவற்றுக்கெல்லாம் ஒருபொழுதும் சற்றும் இடங்கொடுக்காமல் மனவுறுதியோடு இருப்பான். இவற்றையெல்லாம் வாந்தியெடுத்த அல்லது கழிவுப் பொருளாக, கழுதையின் சிறுநீராக அல்லது விஷமாகப் பாவிப்பான்.

இவ்வுலகம் துன்பங்களாலும் கஷ்டங்களாலும் நிறைந்திருக்கிறது. ஒரு யோகி, பக்தன் அல்லது ஞானியைத் தவிர வேறு யாரும் இவ்வுலகக் கஷ்டங்களிலிருந்தும் கவலைகளிலிருந்தும்

துன்புறாமலில்லை. நீ எங்கு வேண்டுமானாலும் செல், அதில் ஒன்றும் பயனில்லை.

கமலாவுக்கும் கிருஷ்ணனுக்கும் குழந்தைகளே இல்லை. ஒரு நாள் இரவு ஓர் உயர்ந்த கட்டிலில் படுத்துக் கொண்டிருக்கையில் அவர்கள் மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்தார்கள். ''எனக்கு ஒரு குழந்தை பிறந்தால் அவனுக்குப் படுக்குமிடத்திற்கு என்ன செய்வீர்கள்" என்று கமலா கிருஷ்ணனைக் கேட்டாள். ''இந்தக் கட்டிலிலேயே அவனுக்கு இடம் கொடுப்பேன்'' என்று சொல்லி தன் மனைவியிடமிருந்து சற்று இடம் விட்டு நகர்ந்து கொண்டான். ''நான் இரண்டாவது குழந்தை பெற்றால் என்ன செய்வீர்கள்'' என்று அவள் மறுபடியும் கேட்டாள். ''இதே கட்டிலிலேயே அவனுக்கும் இடம் கொடுப்பேன்" என்று சொல்லி இன்னும் கொஞ்சம் விலகிக் கொண்டான். இப்பொழுது அவன் கட்டிலின் ஓரத்திற்கு வந்துவிட்டான். ''அன்பார்ந்த கணவரே, நான் மூன்றாவது குழந்தை பெற்றால் என்ன செய்வீர்கள்" என்றாள் மறுபடியும் கமலா. ''இந்தக் கட்டிலிலேயே அவனுக்கும் இடம் கொடுப்பேன்" என்று சொல்லி இன்னும் கொஞ்சம் நகர்ந்தபோது அவன் கீழே விழுந்து கால்களை முறித்துக் கொண்டான். கிருஷ்ணனுடைய பக்கத்து வீட்டுக்காரர் வந்து ''உன் கால்களுக்கு என்ன நேர்ந்தது" என்று கேட்டார். ''என்னுடைய பொய்க் குழந்தைகளால் நான் காலை உடைத்துக் கொண்டேன்" என்றான் கிருஷ்ணன். உலக மக்களுக்கும் இதே கதிதான். அவர்கள் மித்ய அபிமானத்தாலும் (பொய் எண்ணம் அல்லது அபிமானம்) மித்ய சம்பந்தத்தாலும் (பொய் உறவு) துன்பமுறுகிறார்கள்.

அத்தியாயம் 4

## சரீரம்

இடைவிடாத வெறுப்புக்கும் மிகப் பெரிய பந்தத்திற்கும் மூலகாரணம் பெண். ஒரு மாதின் உருவம் சதையாலும் கொழுப்பாலும் மூடப்பட்ட வெறும் எலும்புக் கூட்டைத் தவிர வேறொன்றுமில்லை.

பெண்ணே எல்லாத் துன்பங்களுக்கும் காரணம். அவள் காமமே உருவானவள். அவள் உன்னுடைய உயிர்ச் சக்தியை உறிஞ்சிவிடுகிறாள். அவளைத் திருப்தி செய்வதற்காக நீ எத்தனையோ தீய காரியங்களைச் செய்கிறாய். இக்காரியங்களின் பலன்களை நீ அடைந்து கஷ்டப்பட்டேயாக வேண்டும். பொம்மலாட்டப் பாவைகளைப் போன்ற பெண்களிடமிருந்து பெறுதற்குரிய இன்பம் என்ன இருக்கிறது? ஆழ்ந்து விசாரம் செய். ஆராய்ச்சி செய். இந்தப் பொய்த் தோற்ற உருவத்தை எந்த விவேகியாவது அல்லது பகுத்தறிவாளியாவது மனதாலும் நினைப்பானா? ஒரு மாதின் உருவத்தில் நீ காணும் அழகு, உள்ளிருக்கும் ஆன்மாவிலிருந்து வெளிவருவதே. ஏழு நாள்கள் நோய்வாய்ப்பட்ட பிறகு ஒரு ஸ்திரீயின் கண், முகம், சரீரம் இவற்றின் நிலையைப் பார்! அழகு எங்கே சென்று விட்டது? ஒரு கிழவியின் சுருக்கமுள்ள முகத்தைப் பார். மாதின் அங்கங்களைப் பாகுபாடு செய்து பார், அவற்றின் பொய்யான மாயைத் தன்மையை அறிந்து அவற்றை அறவே கைவிடு. நீ இந்த சரீரத்தை, சதை, இரத்தம், எலும்பு, வியர்வை இப்படியாகப் பாகுபாடு செய்து பார்த்தால், பெண்களிடத்திலுள்ள கவர்ச்சி கொஞ்ச

காலத்தில் அற்றுப் போகும். பெண்களிடத்திலுள்ள அன்பும் பற்றும், புத்தி, முக்தி, நற்செய்கைகள் முதலிய எல்லாவற்றையும் அழித்து மனதைக் குறுகச் செய்கிறது.

எல்லாப் போகங்களுக்கும் காரணமாகிய ஸ்திரீகளிடத்திலுள்ள காமம் அற்றுப் போகுமாயின் பிறகு மனதிலே ஆதாரம் கொண்டுள்ள எல்லாப் பந்தங்களும் தானாகவே அற்றுப் போய் விடும். விஷய வஸ்துகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மிகக் கொடிய விஷமும் விஷமில்லை. விஷம் ஒரு சரீரத்தை மட்டும் பாழ்படுத்துகிறது, ஆனால் விஷயப் பொருள்கள் அனேக அடுத்தடுத்த பிறவிகளுக்குக் காரணமாகின்றன. கேவலம், அற்ப ஆசைகளைத் திருப்தி செய்து கொள்வதற்காக இல்லை இந்த சரீரம். இப்பொழுது தீவிர சாதனை செய்து எப்பொழுதும் எல்லையில்லாத ஆனந்தத்தை அடைவதற்கே இந்தசரீரம் இருக்கிறது. மனித வாழ்க்கையின் நோக்கமாகிய பிரம்ம ஞானத்தை அடைவதற்கு சரீரம் ஒரு சாதனம். சம்சாரமாகிய சாகரத்தைக் கடந்து மறு கரையை அடைவதற்கு அது ஒரு படகு போல் உதவி செய்கிறது.

இந்த சரீரம் எண்ணற்ற துன்பங்களுக்கு ஆதாரம். அது அசுத்தத்தால் நிறைந்திருக்கிறது. அது அபகீர்த்தி, இகழ்ச்சி, கஷ்டம் முதலியவற்றைக் கொடுக்கிறது. அது முன்னெச்சரிக்கையின்றி கண நேரத்தில் மறைந்து சென்று விடுகிறது. அது நோய், அழிவு, முதுமை முதலியவற்றுக்கு உட்பட்டது. ஆகையால், நிரந்தர, தூய்மையான, எங்கும் பரந்துள்ள ஆன்மாவையே எப்பொழுதும் நினை.

இந்த உடல் தற்காலத்தில் மட்டுமே தோற்றமளிக்கிறது. முன்பும் பின்பும் இல்லாத ஒரு பொருளை இப்பொழுதும் இல்லாதது என்றே கருத வேண்டும். தூய புத்தியோடு நீ இந்த விஷயத்தை நன்றாக ஆராய்ந்து பார்த்தால், இந்த உலகம் ஒன்றுமே இல்லாதது (அத்யந்த அபவா) என்பதைக் காண்பாய்.

அசுத்தம், சிறுநீர், கழிமலம், சீழ் முதலியவற்றால் நிறைந்துள்ள இந்த சரீரம் அழியக் கூடியது. இது நுரை, நீர்க்குமிழ் அல்லது கானல் நீர் ஆகியவற்றைப் போல் நிலையில்லாதது. உன் விரோதிகளால் இது இழிவாகக் கருதப்படுகின்றது. பிராணன் இவ்வுடலை விட்டு நீங்கிய பிறகு, அது உபயோகமற்ற மரக்கட்டை போல் தரையில் விழுந்து கிடக்கிறது. எல்லாக் கஷ்டங்களுக்கும் துயரங்களுக்கும் அதுவே காரணம். அது உன்னுடைய உண்மை விரோதி. நீ இந்த சரீரத்தை, சாணமாகப் பாவித்துப் புறக்கணிக்க வேண்டும். நீ ஏன் அதைப் பற்றிக் கொண்டு செண்ட், பௌடர், புஷ்பங்களால் பூஜை செய்கிறாய்? அதை அழகான பட்டுத் துணிகளாலும், ஆபரணங்களாலும் அலங்கரித்துக் கொண்டு சிறுபிள்ளைத்தனமாக இருக்காதே. அது முற்றிலும் அறியாமையாகும்.

‘‘இவ்வுலகத்திலுள்ள எதுவும் எனக்குச் சொந்தமில்லை. இந்தசரீரம்கூட என்னுடையதில்லை." இதுவே உண்மையறிவாகும். ‘‘அவன் என்னுடைய மகன். அவள் என்னுடைய மகள். அவள் என் மனைவி. அந்த வீடு என்னுடையது. நான் ஒரு பிராமணன். நான் ஒல்லியாக இருக்கிறேன். நான் குண்டாக இருக்கிறேன்." இது உயர்தரமான அறிவின்மையாகும். இந்த சரீரம் மீன், நரி, கழுகு

ஆகியவற்றுக்குரிய சொத்தாகும். இதை நீ எப்படி உன்னுடையது என்று சொல்லிக் கொள்ளலாம்?

உடம்பிற்கு சோப்பு, தலைக்கு எண்ணெய், முகத்திற்குப் 'பௌடர்' உபயோகித்தல், தினம் ஆயிரம் தரம் கண்ணாடியில் முகத்தைப் பார்த்துக் கொள்ளல், விரல்களில் மோதிரம் அணிந்து கொள்ளல், இவையும் இன்னும் இவை போன்றவையும், உடம்பின் மேலுள்ள பற்றை மேலும் அதிகப்படுத்தும். ஆகையால் இவற்றை இரக்கமின்றி விட்டுவிடு.

ஒரு பெரிய கொப்பளம் குணநீரால் (lotion) கழுவப்படுகிறது. பிறகு 'போரிக்' களிம்பு (Oinment) அதற்குத் தடவப்படுகிறது. அதன் பிறகு துணி கட்டப்படுகிறது. அதேபோல் இந்த அசுத்த சரீரமும் ஒரு மிகப் பெரிய கொப்பளம். அது தினம் கழுவப்படுகிறது. ஆகாரம் அதனுள் திணிக்கப்படுகிறது. இதுதான் களிம்பு. ஆடை அணிவிக்கப்படுகிறது. இதுதான் துணிக்கட்டு, சாதுக்கள் இந்த சரீரத்தை அசுத்தங்கள் கசிந்தொழுகும் ஒரு மிகப் பெரிய கொப்பளமாகப் பாவிக்கிறார்கள். ஆனால் மயக்கத்தாலும் அறியாமையாலும் உலகியல் மக்கள் இந்த சரீரத்திற்குப் பூஜை செய்கிறார்கள்.

உடை அணிந்து கொள்வது இந்த சரீரத்தின் அழகை அதிகப்படுத்துவதற்காக அல்ல. இந்த சரீரம் அனேகவித அசுத்தங்களால் நிரப்பப்பட்ட ஓர் அழுக்கான தோற்பை. இந்த அசுத்த சரீரத்தை மூடுவதற்காகவே துணி அணிந்து கொள்ளப்படுகிறது. எளிய ஆடைகளையே அணிந்துகொள். உயர்ந்த எண்ணங்களை நினை. தூய்மையோடு கூடிய, ஆன்மா

அல்லது கடவுளில் ஆழ்ந்த வாழ்க்கையே உண்மை யான அழகைக் கொடுக்க முடியும்.

இவ்வுடலின் அழகு உண்மையல்ல. வெறும் தோற்றமே. தோலின் அழகும் வெறும் தோற்றமே. அழியாத எல்லையில்லாத அழகை நீ கடவுளில் மட்டுமே பெறலாம்.

மனிதனே! எல்லாப் பொருள்களும் அழியும் தன்மையுள்ளவையாக இருக்கும்போது இந்த அசுத்தமான சரீரத்தை "நான்" என்றும், "இது என்னுடையது", "இவன் என் மகன்" என்றும் சொல்லிக் கொள்ள உனக்கு வெட்கமாக இல்லையா? "மனிதர்களுடைய இந்த சரீரங்கள் நம்முடையவை" என்று நரிகளும் கழுகுகளும் மீன்களும் சொல்கின்றன. இவ்வுலகம் அல்லது இந்த சம்சாரம் அஸரம் அல்லது விரஸம். எலும்புகளைக் கம்பம் போல் ஆதாரமாகக் கொண்டு, நரம்புகளால் கட்டப்பட்டு, இரத்தத்தாலும் சதையாலும் மேலே பூசப்பட்டு, தோலால் போர்த்தப்பட்ட, துர்நாற்றத்தோடு கூடிய, சிறுநீராலும் கழிமலத்தாலும் நிரப்பப்பட்டிருக்கும், துன்பம், துயரம், நோய் முதலியவற்றுக்கு இருப்பிடமாகிய, பஞ்ச பூதங்களால் ஆகி, சக்தியற்ற அழியக்கூடிய அசுத்தமான இந்த சரீரத்தின் மேலுள்ள அபிமானத்தை (பற்றை) விட்டு விடு. இவ்வுடலின் மேலுள்ள இந்த அபிமானமே கொடூர நரக வேதனைக்குக் காரணம். துர்நாற்றம் வீசும் இந்த சரீரத்தில் மகிழ்ச்சிடையும் மனிதர்களுக்கும் புழுக்களுக்கும் என்ன வித்தியாசம்? பெரிய செப்பிடு வித்தை செய்யும் மாயை ஓர் எலும்புக் கூட்டைத் தயார் செய்து சதையால் மறைத்து அனேகவித அசுத்தங்களை ஓர் அழகிய பளபளப்பான

தோலால் மூடி வைத்திருக்கிறது. அறிவிழந்து மயங்கிய மனிதனே! எத்தனை காலம்தான் நீ இந்த சரீரத்தை உன்னுடையது என்று சொல்லிக் கொள்ளப் போகிறாய்? இந்த அழியும் சரீரத்தை நீ எத்தனை காலம் பற்றிக் கொண்டிருக்கப் போகிறாய்? இச்சரீரத்தின் மேலுள்ள அபிமானத்தை விட்டு சச்சிதானந்த ஸ்வரூபமாகிய உன் உண்மைத் தன்மையை அறிந்து கொள்.

இவ்வுடல் வியாதியும் தளர்ச்சியும் இல்லாமலிருக்கும் போது, முதுமைக்கு வெகு நாள்களிலிருக்கும்போது, இந்திரியங்களின் சக்திகள் பாதிக்கப்படாமலிருக்கும் போது, வாழ்க்கை சிதைவுறாமலிருக்கும்போது, விவேகம் அல்லது பகுத்தறிவுள்ள மனிதன் ஆத்மானுபூதிக்குப் பாடுபட வேண்டும். வீடு பற்றி எரியும்போது கிணறு வெட்டுவது பயனற்றது.

அத்தியாயம் 5

## பெண்

வைராக்கியத்தை தூண்டுவதற்காக மனிதர்களின் திருஷ்டியிலிருந்து எங்கெங்கு ஸ்திரீகள் கண்டிக்கப்படுகிறார்களோ, அங்கெல்லாம் பெண்களின் திருஷ்டியிலிருந்து மனிதர்களின் கண்டனமும் குறிக்கப்பட்டிருக்கிறது என்பதை வாசகர்கள் நன்கு நினைவில் வைத்துக் கொள்வார்கள்.

திருமணம் ஒரு சாபம். அது வாழ்நாள் முழுமையும் ஒரு கால்கட்டு. அது ஒரு மிகப் பெரிய பந்தம். காமத்தால் நிறைந்துள்ள மணமாகாத ஒருவன், தனக்கு மனைவியில்லாததால் தான் துன்பமுறுவதாக எண்ணுகிறான். ஒரு நேரம் சுதந்திரமாக இருந்தவன் இப்பொழுது சம்சாரமாகிய நுகத்தடியில் பிணைக்கப்பட்டு, கைகளும் கால்களும் கட்டப்பட்டு இருக்கிறான். இதுவே எல்லா மணமானவர்களின் அனுபவம். மணமான பிறகு அவர்கள் அழுகிறார்கள். காமத்தின் மூலம் இவ்வுலகத்தில் பிச்சைக்காரர்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்படுகிறது. மானிடத் துயரங்களின் அளவை நன்றாக உணர்ந்தவன், ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கத் துணியமாட்டான்.

ஓயாத வெறுப்புக்கும் துன்பத்திற்கும் மூலகாரணம் மாது, அவள் மிகப் பெரிய பந்தம். வாழ்க்கையின் உயரிய, உன்னதமான நோக்கமாகிய ஆத்மானுபூதியைக் கேவலம், மயக்கமூட்டும் மாதை மகிழ்விப்பதற்காக ஒருவன் தியாகம் செய்ய முடியாது.

மனைவி வெறும் ஆடம்பரம், அது இன்றியமையாததல்ல. மணமான பிறகு ஒவ்வொரு குடும்பஸ்தனும் அழுகிறான். ''என் மகன் 'டைபாய்ட்' காய்ச்சலால் நோயுற்றிருக்கிறான். என் இரண்டாம் மகளுக்கு மணம் செய்ய வேண்டும். நான் அதிகக் கடன்களை அடைக்க வேண்டும். தனக்கு ஒரு காசு மாலை வாங்கித் தரும்படி என் மனைவி என்னைத் தொந்தரவு செய்து கொண்டிருக்கிறாள். என் மூத்த மருமகன் சில நாள்களுக்கு முன் இறந்துவிட்டான்" என்று இப்படியாக அவன் அலறுகிறான். இப்பேர்ப்பட்ட துன்பங்களெல்லாம் வாழ்க்கையில் சாதாரணமானவையே.

கணவனின் வாழ்க்கையைப் பாழாக்கும் ஓர் கூரிய வாள் மனைவி. அதேபோல் கணவனும். அனுசூயையும் சாவித்திரியும் மிக மிக அரிது. பொன் காசு மாலையும் பனாரஸ் பட்டுப் புடவையும் உரிய காலத்தில் வாங்கிக் கொடுக்காவிட்டால், மனைவியின் கண்களிலிருந்து அனல் பறக்கிறது. கணவனுக்கு நேரத்தில் உணவு கிடைப்பதில்லை. கொடிய வயிற்று வலி என்று பொய்க் காரணம் சொல்லிப் படுக்கையில் படுத்துக் கொண்டு விடுகிறாள். உன் வீட்டிலும், உன் நண்பர்கள் வீட்டிலும் தினசரி வாழ்க்கையிலும் இவ்வித பரிதாபகரமான காட்சியை நீயே பார்க்கலாம். உண்மையில் நான் உனக்கு அதிகம் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் சாந்தி (அமைதி)யோடு மணம் புரிந்து, வைராக்கியமாகிய நற்குண மகனையும், விவேகமாகிய பெருந்தன்மையுடைய மகளையும் பெறு. உன்னை அமரனாக்கும், ஆத்மஞானமாகிய மிக்க சுவையுள்ள கனியை உண்.

உன் மனைவி இளமையோடும் அழகோடும் இருக்கும்போது, அவள் சுருண்ட தலைமுடியையும் சிவந்த கன்னங்களையும் அழகான மூக்கையும் பளபளப்பான தோலையும் வெண்மையான பற்களையும் நீ பாராட்டுகிறாய். ஏதாவது ஒரு முற்றிய, குணப்படுத்த முடியாத நோயால் அவள் தன் அழகை இழக்கும்போது, உனக்கு அவளிடத்தில் கவர்ச்சி இல்லை. நீ இரண்டாவது மனைவியை மணம் புரிந்து கொள்கிறாய். நீ உன் முதல் மனைவியை ஆத்ம-பாவத்தோடு நேசித்திருந்தால், உனக்குள்ளும் உன் மனைவிக்குள்ளும் இருக்கும் ஆன்மா ஒன்றே என்னும் பரந்த அறிவு உனக்கு இருக்குமானால், அவளிடம் உனக்குள்ள அன்பு தன்னலமற்றதாக, பரிசுத்தமானதாக, நிரந்தரமானதாக, அழியாததாக, மாறுபடாததாக இருந்திருக்கும். எப்படி பழைய கற்கண்டையும் பழைய அரிசியையும் நீ அதிகமாக விரும்புகிறாயோ, அதேபோல், ஞானத்தால் ஆத்ம-பாவம் பெற்றிருந்தால், உன் மனைவி முதுமையடையும்போதுகூட நீ அவளை மேலும் மேலும் நேசிப்பாய். ஞானம், அன்பை அதிகரித்து நிலைத்திருக்கக் கூடியதாகச் செய்யும்.

எவன் தன் மனைவி, குழந்தை, செல்வம் ஆகியவற்றில் மிகவும் பற்றுள்ளவனாக இருக்கிறானோ, அவன் தன் ஆன்மீகப் பாதையில் ஒருசிறிதுகூட முன்னேற்றம் அடையமாட்டான். பகுத்தறிவின்றி மனைவி, குழந்தை, வீடு, செல்வம், பொருள் இவற்றைப் பற்றிக் கொண்டிருப்பதால், நீ உன்னுடைய உண்மைத் தெய்வீகத் தன்மையை மறந்துவிட்டாய். நீ இறக்கும்பொழுது, காதறுந்த ஊசி கூட உன்னுடன் வராது. நீ செய்த நல்வினையும்

தீவினையுமே உன்னைப் பின்பற்றும். உன் வினைகளையும் நோக்கங்களையும் கொண்டே கடவுள் உன்னை மதிப்பிடுவார்.

"நான் என் இளம் மனைவியோடு எப்பொழுது இன்பமாக வாழ்வேன்" என்று காமத்தால் நிறைந்த ஒரு மணமாகாதவன் எப்பொழுதும் நினைக்கிறான். "எப்பொழுது என் மனைவியின் பிடிகளிலிருந்து என்னை விடுவித்துக் கொண்டு ஆன்மாவின் மேல் தியானம் செய்யக் காட்டிற்குச் செல்வேன்" என்று வைராக்கியமும் விவேகமும் உதயமாகிய ஒரு குடும்பஸ்தன் எப்பொழுதும் நினைக்கிறான். பந்தத்திற்கும் விடுதலைக்கும் காரணம் மனமே. இந்த மனத்தையழித்து ஆத்மாவில் அமைதியடை.

நீ பெண்களின் விருப்பு வெறுப்புக்குட்பட்ட ஒரு விளையாட்டுப் பொம்மையாகிவிட்டாய். நீ எண்ணற்ற ஆசைகளுக்கும், மனவெழுச்சிகளுக்கும், காமத்திற்கும் அடிமையாகி விட்டாய். இந்தப் பரிதாபகரமான நிலையிலிருந்து நீ எப்பொழுது முன்னுக்கு வரப் போகிறாய்? "விஷம் போன்ற இவ்வுலகப் பொருள்களில் முன்னும் பின்னும் இன்பமில்லை என்னும் அறிவைப் பெற்றிருந்தும், எவன் அவற்றில் தன் மனதை ஈடுபடுத்தித் தன்னை சிக்க வைத்துக் கொள்கிறானோ, அவன் கழுதை என்று அழைக்கப்படுவதற்குத் தகுதி வாய்ந்தவன்" என்று யோக வாசிஷ்டத்தில் காணலாம்.

மானிட அன்பு ஒன்றுமில்லாதது, நம்பத்தகாதது. அது வெறும் மிருகக் கவர்ச்சி. அது வெறும் காமம்; அல்லது மனவெழுச்சி. அது கேவலம், சிற்றின்ப ஆசை. அது தன்னல நேசம். அது மாறிக் கொண்டே

இருக்கக் கூடியது. அது கபடமானது. வெறும் வெளிவேஷம். தன் கணவன் வேலையில்லாமல் திண்டாடினால், அவனை மனைவி மதிப்பதில்லை. ஏதாவது கொடிய நோய் காரணமாக அவள் தன் அழகை இழக்கும்போது, கணவன் அவளை வெறுக்கிறான். அன்பார்ந்த மனிதனே, நீ உண்மையான நிரந்தர அன்பைக் கடவுளில் மட்டுமே காணலாம். அவனுடைய அன்பு மாறுபாடில்லாதது.

ஒரு பெண்ணுடைய உருவத்தின் எண்ணம் மனதின் அமைதியைக் குலைக்கிறது. காமம் மிகவும் சக்தி வாய்ந்தது. அது ஓர் அழகிய பூவாலாக்கப்பட்ட வில் இல்லை. அதனிடத்தில் மோஷனா, ஸ்தம்பனா, உன்மாதனா, ஸோஷனா, தாபனா (மயக்கம், உணர்ச்சி மழுக்கம், வெறி, சோகம், தாபம்) என்ற ஐந்து அம்புகள் இருக்கின்றன. இக்கொடிய அம்புகளை விவேகம், ஆராய்ச்சி, பக்தி, ஆழ்ந்த சிந்தனை முதலியவற்றால் அழிக்க வேண்டும். காமத்தை வென்றுவிட்டால், அதனுடைய சகாக்களாகிய கோபம், லோபம் முதலியவை சக்தியற்றுப் போய்விடும். பெண், அன்பின் முக்கிய கருவி. இது அழிக்கப்பட்டு விட்டால், இதன் படையை மிகவும் எளிதில் கைப்பற்றி விடலாம். சேனைத் தலைவன் கொல்லப்பட்டு விட்டால், அந்த சேனையைக் கைப்பற்றுவது எளிதாகி விடுகிறது. முதலில் காமத்தை வெல். பிறகு அதனுடைய சகாக்களில் ஒன்றாகிய கோபத்தை அழிப்பது சுலபமாகி விடும்.

புலி, ஒரு முறை மனிதர்கள் இரத்தத்தைச் சுவைத்து விட்டால், பிறகு எப்பொழுதும் மனிதர்களையே தேடிச் செல்கிறது. அதே போல் மனம் ஒரு முறை

சிற்றின்பத்தை அனுபவித்து விட்டால் அது எப்பொழுதும் அந்த இன்பத்தையே நாடிச் செல்கிறது. இடைவிடாத விசாரணையாலும், பிரம்மானுபவத்தாலும், மனதிலுள்ள காம எண்ணங்களையும் பழக்க வழக்கங்களையும் மறக்கடிக்க வேண்டும். சிற்றின்பம் பொய்யானது, உபயோகமற்றது, பொய்த் தோற்றமானது, துன்பங்களோடு கூடியது என்று மனதிற்கு அறைகூவி அடித்துச் சொல்லி நன்றாகப் புரிந்து கொள்ளச் செய். ஆனந்தம், சக்தி, ஞானம் முதலிய ஆன்மீக வாழ்க்கையிலுள்ள அனுகூலங்களை இடைவிடாது மனதிற்கு எடுத்துச் சொல். உன்னதமான நிரந்தர வாழ்க்கை ஆன்மாவில் மட்டுமே என்றும், கண்டிப்பாய் விஷய போகத்தில் இல்லை என்றும், மனதை நன்றாக அறிந்து கொள்ளச் செய். இவ்விதக் கருத்துகளை இடைவிடாது கேட்பதன் மூலம், மனம் தன் பழைய பழக்கங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு விடும்.

''பணிவு, பாசாங்கின்மை, தீங்கின்மை, மன்னித்தல், நேர்மை, குருவுக்குச் சேவை, தூய்மை, உறுதி, தன்னடக்கம், விஷய வஸ்துகளிடத்தில் பற்றின்மை, அகங்காரமின்மை, பிறப்பு, இறப்பு, முதுமை, நோய் - இவற்றிலுள்ள துன்பத்தையும் கேட்டையும் ஆராய்தல், ஆசையின்மை, மனைவி, மகன், வீடு - இவற்றிடத்து அபிமானமின்மை, வேண்டிய வேண்டாத நிகழ்ச்சிகளில் எப்பொழுதும் சம மனநிலையோடு இருத்தல், வேறு எந்தப் பொருளிடத்தும் பற்றில்லாமல் யோகத்தின் மூலம் என்னிடத்தில் மனவுறுதியோடு கூடிய பக்தி, ஏகாந்த இடங்களுக்கு அடிக்கடி செல்லுதல், மனித சங்கத்தில் மகிழ்ச்சியின்மை, ஆன்ம ஞானத்தில் நிலை பெறல்,

இருக்கக் கூடியது. அது கபடமானது, வெறும் வெளிவேஷம். தன் கணவன் வேலையில்லாமல் திண்டாடினால், அவனை மனைவி மதிப்பதில்லை. ஏதாவது கொடிய நோய் காரணமாக அவள் தன் அழகை இழக்கும்போது, கணவன் அவளை வெறுக்கிறான். அன்பார்ந்த மனிதனே, நீ உண்மையான நிரந்தர அன்பைக் கடவுளில் மட்டுமே காணலாம். அவனுடைய அன்பு மாறுபாடில்லாதது.

ஒரு பெண்ணுடைய உருவத்தின் எண்ணம் மனதின் அமைதியைக் குலைக்கிறது. காமம் மிகவும் சக்தி வாய்ந்தது. அது ஓர் அழகிய பூவாலாக்கப்பட்ட வில் இல்லை. அதனிடத்தில் மோஷனா, ஸ்தம்பனா, உன்மாதனா, ஸோஷனா, தாபனா (மயக்கம், உணர்ச்சி மழுக்கம், வெறி, சோகம், தாபம்) என்ற ஐந்து அம்புகள் இருக்கின்றன. இக்கொடிய அம்புகளை விவேகம், ஆராய்ச்சி, பக்தி, ஆழ்ந்த சிந்தனை முதலியவற்றால் அழிக்க வேண்டும். காமத்தை வென்றுவிட்டால், அதனுடைய சகாக்களாகிய கோபம், லோபம் முதலியவை சக்தியற்றுப் போய்விடும். பெண், அன்பின் முக்கிய கருவி. இது அழிக்கப்பட்டு விட்டால், இதன் படையை மிகவும் எளிதில் கைப்பற்றி விடலாம். சேனைத் தலைவன் கொல்லப்பட்டு விட்டால், அந்த சேனையைக் கைப்பற்றுவது எளிதாகி விடுகிறது. முதலில் காமத்தை வெல். பிறகு அதனுடைய சகாக்களில் ஒன்றாகிய கோபத்தை அழிப்பது சுலபமாகி விடும்.

புலி, ஒரு முறை மனிதர்கள் இரத்தத்தைச் சுவைத்து விட்டால், பிறகு எப்பொழுதும் மனிதர்களையே தேடிச் செல்கிறது. அதே போல் மனம் ஒரு முறை

சிற்றின்பத்தை அனுபவித்து விட்டால் அது எப்பொழுதும் அந்த இன்பத்தையே நாடிச் செல்கிறது. இடைவிடாத விசாரணையாலும், பிரம்மானுபவத்தாலும், மனதிலுள்ள காம எண்ணங்களையும் பழக்க வழக்கங்களையும் மறக்கடிக்க வேண்டும். சிற்றின்பம் பொய்யானது, உபயோகமற்றது, பொய்த் தோற்றமானது, துன்பங்களோடு கூடியது என்று மனதிற்கு அறைகூவி அடித்துச் சொல்லி நன்றாகப் புரிந்து கொள்ளச் செய். ஆனந்தம், சக்தி, ஞானம் முதலிய ஆன்மீக வாழ்க்கையிலுள்ள அனுகூலங்களை இடைவிடாது மனதிற்கு எடுத்துச் சொல். உன்னதமான நிரந்தர வாழ்க்கை ஆன்மாவில் மட்டுமே என்றும், கண்டிப்பாய் விஷய போகத்தில் இல்லை என்றும், மனதை நன்றாக அறிந்து கொள்ளச் செய். இவ்விதக் கருத்துகளை இடைவிடாது கேட்பதன் மூலம், மனம் தன் பழைய பழக்கங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு விடும்.

''பணிவு, பாசாங்கின்மை, தீங்கின்மை, மன்னித்தல், நேர்மை, குருவுக்குச் சேவை, தூய்மை, உறுதி, தன்னடக்கம், விஷய வஸ்துகளிடத்தில் பற்றின்மை, அகங்காரமின்மை, பிறப்பு, இறப்பு, முதுமை, நோய் - இவற்றிலுள்ள துன்பத்தையும் கேட்டையும் ஆராய்தல், ஆசையின்மை, மனைவி, மகன், வீடு - இவற்றிடத்து அபிமானமின்மை, வேண்டிய வேண்டாத நிகழ்ச்சிகளில் எப்பொழுதும் சம மனநிலையோடு இருத்தல், வேறு எந்தப் பொருளிடத்தும் பற்றில்லாமல் யோகத்தின் மூலம் என்னிடத்தில் மனவுறுதியோடு கூடிய பக்தி, ஏகாந்த இடங்களுக்கு அடிக்கடி செல்லுதல், மனித சங்கத்தில் மகிழ்ச்சியின்மை, ஆன்ம ஞானத்தில் நிலை பெறல்,

உண்மை ஞானப் பொருள்களைப் புரிந்து கொள்ளல் - இவைகளே மெய்யுறவு என்று உறுதியாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இவற்றுக்கு மாறானவையெல்லாம் அறியாமை" என்று பகவத் கீதையில் நீ காணலாம். (XIII 8-12)

"அசுர மனிதர்கள் சரியான ஊக்கமோ, தன்னடக்கமோ அறியார். அவர்களிடத்தில் தூய்மையோ, நேர்மையோ, உண்மையோ கிடையாது. "இவ்வுலகம் உண்மையற்றது, ஆதாரமற்றது. கடவுளின் துணையின்றி, காமத்தால் ஒன்றுக்கொன்றான சேர்க்கையால் உண்டாக்கப்பட்டது. வேறொன்று மில்லை." இக்கொள்கைகளைக் கொண்ட, அறியாமையில் மூழ்கிய, பாழடைந்த கொடூரச் செயல்களைச் செய்யும் ஆன்மாக்கள், இவ்வுலக நாசத்திற்காக விரோதிகளைப் போல் தோன்றுகின்றன. திருப்தி செய்ய முடியாத எண்ணற்ற ஆசைகளுக்குத் தங்களை அடிமைப்படுத்திக் கொண்டு, பகட்டும் செருக்கும் இறுமாப்பும் நிறைந்து, அறியாமையால் தீய எண்ணங்களையுடையவர்களாக, தூய்மையற்ற தீர்மானத்தோடு அவர்கள் செயலில் ஈடுபடுகிறார்கள். மரணத்திற்குக் காரணமாகிய அளவற்ற எண்ணங்களுக்கு ஆளாகி, ஆசைகளைத் திருப்தி செய்து கொள்வதே எல்லாவற்றிலும் மேலானது என்ற எண்ணத்தோடு, இதைவிட மேலானது ஒன்றுமில்லை என்ற ஆழ்ந்த எண்ணத்தோடு நூற்றுக்கணக்கான ஆசைகளால் பந்தப்பட்டு, காமத்திற்கும் கோபத்திற்கும் ஆளாகி, விஷய போகத்திற்காக நேர்மையற்ற வழிகளில் செல்வத்தைக் குவிக்க அவர்கள் பாடுபடுகிறார்கள். (கீதை அத். XVI. 7-12)

"கேவலம் சதை, இரத்தம், சீழ், மலம், சிறுநீர், தசை, கொழுப்பு, எலும்பு முதலியவற்றாலான இந்த சரீரத்தை, அறிவில்லாத ஒருவன் மயங்கிப் போய் நேசித்தால் அவன் உண்மையாகவே நரகத்தையும் நேசிப்பான்! தன்னுடைய சரீரத்திலிருந்து வரும் துர்நாற்றத்தில் எவனுக்கு அருவருப்பு ஏற்படுவதில்லையோ அவனுக்கு வைராக்கியத்தை யுண்டு பண்ண இதைவிட வேறு என்ன காரணம் காட்ட வேண்டியிருக்கிறது" என்று விஷ்ணு புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

"தசை நார்களாலும் எலும்பாலுமான ஒரு கூடு போன்ற நடமாடும் பதுமையில் மெச்சத் தக்கபடி என்ன இருக்கிறது? அவன் கண்களை நன்றாகக் கவனித்துப் பார்த்து, அதிலிருக்கும் சவ்வுத்தாள், தசை, இரத்தம், கண்ணீர் முதலியவற்றில் வசீகரமும் அழகும் இருக்கின்றனவா என்று நன்றாக ஆராய்ந்து தெரிந்து கொள். பிறகு ஏன் நீ அவற்றில் மயங்கி, காமத்திற்குட்பட்டு கெட்டுப்போகிறாய்? அவள் மார்பில் முத்துமாலை அங்குமிங்கும் ஆடும்போது, அவ்வழகை மேருமலையின் உச்சியில் அழகாக ஓடும் கங்கைப் பிரவாகத்திற்கு ஒப்பிடலாம். ஆனால் அதே மாதின் மார்பை, சந்தர்ப்பம் வாய்க்கும் போது, ஊருக்கு ஒதுக்குப்புறமாக இருக்கும் சுடுகாட்டில் நாய்கள் சாத உருண்டையைச் சாப்பிடுவது போல் மிக ஆர்வத்தோடு கடித்துத் தின்றுவிடுகின்றன. கருத்த அழகிய தலைமுடியையுடைய கண்கவரும் பெண்கள், பாபத்தீயின் அனலைப் போன்றவர்கள், வைக்கோலை எரிப்பது போல் மனிதர்களை அழித்துவிடுகிறார்கள். பளபளப்பாக அழகோடும் இளமையோடும் காணப்படும் பெண்கள், உண்மையில் கருணையே

இல்லாதவர்கள். தங்கள் வசீகரப் பார்வையால் மனிதர்களின் மனதைக் கவர்ந்து, நாசத்தையடையச் செய்து, நரக லோகத்திலுள்ள தீயில் தள்ளி அதை மேலும் வளர்க்கிறார்கள். கபடமற்ற மனிதர்களாகிய பறவைக் கூட்டத்தைப் பிடிப்பதற்காக, காமனாகிய பறவை பிடிப்பவனால் போடப்பட்ட வலை பெண்கள். இறப்பு பிறப்பாகிய குட்டையில், மனமாகிய அசுத்தச் சேற்று நீரில் உழலும் மனிதர்களாகிய மீன்களைப் பிடிப்பதற்கு, மறைந்த தீய ஆசைகளாகிய தூண்டிலில் மாட்டப்பட்டிருக்கும் கொடி இரை பெண். கொடிய பாவங்களாகிய விலையுயர்ந்த மாணிக்கமும் முடிவில்லாத சங்கிலியாகிய சித்திரவதைத் துன்பங்களும் கொண்ட அழகிய பெட்டியாகிய பெண்களின் சகவாசம் போதும். சில இடத்தில் சதையாலும் சில இடத்தில் இரத்தத்தாலும் மற்றும் சில இடத்தில் எலும்பாலும் ஆக்கப்பட்டிருக்கும் இம்மாதின் உருவம், மனிதனே! கடைசியாக சில நாள்களில் சிதறிப் போய்விடுகிறது. தனக்கு அருகில் பெண் இருக்கும் ஒருவனுக்கே அவளோடு புணர்ச்சி கொள்ள ஆசை உண்டாகிறது. ஆனால் பெண் இல்லாதவனுக்கு இப்பேர்ப்பட்ட போகத்திற்குச் சந்தர்ப்பம் ஏது? ஆகையால் அவளையும் இவ்வுலகத்தையும் கைவிடு. உலகம் முழுவதையும் வெறுத்துத் தள்ளுவதால் நீ நேர்த்தியான ஆனந்தத்தை அடைவாய்" என்று வசிஷ்ட முனிவர் ஸ்ரீராமனுக்குக் கூறுகிறார்.

காமம் விட்டொழிக்கக் கஷ்டமான ஒரு வலிமை வாய்ந்த சக்தி. ஆகையால் பொதுமக்கள் மனதின் முன் நான் இப்பேர்ப்பட்ட ஒரு படத்தை வரைந்து காட்ட வேண்டியிருக்கிறது. உண்மையில் பெண்கள் உலக மாதாவின் சக்தியாகப் போற்றப்பட வேண்டும். அவளே

உலகத்தை ஆக்கிக் காப்பாற்றுபவள். அவள் வணங்கி மதிக்கப்பட வேண்டும். அவர்களிடத்திலுள்ள பக்தித் தன்மையாலேயே இந்தியாவில் மதம் காப்பாற்றப்பட்டு வளர்க்கப்படுகிறது. பக்தி, ஹிந்துப் பெண்களின் அடிப்படைக் குணம். காமத்தை வெறு, பெண்களையல்ல.

"எங்கு பெண்கள் மதிக்கப்படுகிறார்களோ அங்கு தேவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள்; எங்கு அவர்கள் அவமதிக்கப்படுகிறார்களோ அங்கு எவ்விதத் தெய்வீகக் காரியமும் பலன் தராது".

அத்தியாயம் 6

## உலகம்

இது மிகவும் விசித்திரமான உலகம். இது மிகப் பெரிய அற்புதமான காட்சி சாலை. புஷ்பம், இமயமலையின் இயற்கைக் காட்சி, நயாகரா நீர் வீழ்ச்சி, நீலக்கடல், வானம், தாஜ்மஹால் இவையெல்லாம் பார்ப்பதற்கு மிக அழகாகவும் வசீகரமாகவும் இருக்கின்றன. ஆனால் பூகம்பம், எரிமலை வெடிப்புகள், மின்னல், சூறாவளி, இன்புளுவென்ஸா, பிளேக் போன்ற தொற்று நோய் இவையெல்லாம் மிக அச்சத்தைக் கொடுப்பனவாயும் பயங்கரமாயும் இருக்கின்றன.

ஓர் அழகிய மனைவி மிகவும் வசீகரமுள்ளவளாக இருக்கிறாள். இளமையோடு இருக்கும்போதும், புன்முறுவல் செய்யும்போதும், அழகிய ஆடைகளை அணிந்துகொள்ளும்போதும், பாடும்போதும், பியானோ அல்லது வயலின் வாசிக்கும் போதும், நடனமாடும் போதும், அவள் மிகவும் இன்பமூட்டுகிறாள். ஆனால் அவள் கோபப்படும்போதும், பட்டுப்புடவையும் காசுமாலையும் வாங்கிக் கொடுக்காததற்குக் கணவனுடன் சண்டை செய்யும் போதும், கொடிய வயிற்றுவலி அல்லது வேறு ஏதாவது நோயால் துன்பப்படும் போதும், முதுமையடையும்போதும் பார்ப்பதற்கு மிகவும் கோரமாக இருக்கிறாள்.

வசந்த காலம் மிகவும் ஆனந்தமாக இருக்கிறது. மரங்கள் பூக்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. மிருதுவான இளம் தென்றல் உண்மையிலேயே

மகிழ்ச்சியூட்டுகிறது. ஆனால், கோடை வாட்டுகிறது, குளிர் நடுக்கித் தள்ளுகிறது.

தனக்குக் குழந்தை பிறக்கும்பொழுதும், மணமாகும் பொழுதும், எதிர்பாராத அதிர்ஷ்டம் வரும்பொழுதும், சம்பளம் உயரும்பொழுதும் மனிதன் சிரித்து சந்தோஷப்படுகிறான். ஆனால், தன் மனைவி இறக்கும் பொழுதும், தன் பணத்தை இழக்கும்பொழுதும், வேலையிலிருந்து நீக்கப்படும்பொழுதும், ஏதாவது கொடிய நோயால் கஷ்டப்படும்பொழுதும் அவன் அழுகிறான்.

அன்பனே! இப்பொழுது சொல்! இந்தப் பொய்யான உலகத்தில் உண்மையாக நீ என்ன காண்கிறாய் இன்பமா, துன்பமா, ஆனந்தமா, துயரமா? மாயையால் உண்டாக்கப்பட்ட இவ்வுலகத்தில் பொய்யான தன்மையை நீ இப்பொழுது அறிந்து கொண்டாயா? இவ்வுலகம் வெறும் தோற்றம். மனமும் புலன்களும் உன்னை ஒவ்வொரு கணமும் ஏமாற்றுகின்றன. நீ துன்பத்தை இன்பமாகத் தவறுதலாக நினைக்கிறாய். இந்தப் புலனுலகத்தில் ஒரு துளிகூட இன்பமே கிடையாது. செல்வத்தைக் குவிப்பதற்காக நீ செய்யும் தன்னல முயற்சிகளையும் சூழ்ச்சிகளையும் விட்டுவிடு. இந்த மாமிசப் பதுமைகளாகிய மானிட உடலை ஆட்டி வைத்து, இந்த உலகமாகிய பெரிய காட்சியை நடத்தி அதன்பின் மறைந்து நின்று ஆட்டி வைக்கும் ஆண்டவனை நோக்கிச் செல். அவனிடத்தில் மட்டுமே நீ நிரந்தர ஆனந்தத்தையும் குறையாத சந்தோஷத்தையும் காண முடியும். தினமும் தியானமும் ஜபமும் பழகி அவனோடு இரண்டறக் கலந்திடு.

இவ்வுலகம் நிழலைப்போலும், நீர்க்குமிழியைப் போலும், நுரையைப் போலும் பொய்யானது. அப்படியிருக்க நீ ஏன் இந்தப் பெயருக்கும் புகழுக்கும் பாடுபடுகிறாய்?

இவ்வுலகத்தில் வாழ்க்கை எவ்வளவு உறுதியில்லாதது! விஷய போகம் எவ்வளவு நிலையில்லாதது, விரைந்து 'மறையக் கூடியது! இப்பொழுது ஏற்பட்ட பீகார், குவெட்டா பூகம்பத்தில் எத்தனை ஆயிரம் பேர் மறைந்து போயினர் என்று கவனி! எவ்வளவு பெரிய உயர்ந்த மாளிகைகள் அழிக்கப்பட்டன! இது அதிதெய்விக தாபம். இருந்தும், மக்கள் சிம்லாவிலும் முசௌரியிலும் பங்களாக்கள் கட்டிக்கொண்டு வாழ்ந்து, அங்கே அமரத்துவமடைய விரும்புகிறார்கள்! இவர்கள் எவ்வளவு அறிவிலிகள்! மயங்கிய ஆத்மாக்கள்! அவர்கள் நிலை பரிதாபகரமானது! சகதியிலேயே உழலுவதால், அவர்கள் மண்புழுக்களே. நான் அவர்களுக்காக இறைவனைப் பிரார்த்திக்கிறேன். கடவுள் அவர்களுக்கு விவேகம், வைராக்கியம், பக்தி முதலியவற்றை அனுக்கிரகம் செய்யட்டும்! காஷ்மீரத்திலுள்ள 'குல்மார்க்' அல்லது 'பயால்காவ்'க்கோ, டார்ஜீலிங் அல்லது சிம்லாவுக்கோ, வியன்னா அல்லது 'ஆல்ப்ஸ்'க்கோ எங்கு வேண்டுமானாலும் செல். எல்லாம் ஒன்றுதான். நீ உண்மையான ஓய்வைப் பெற முடியாது. அழகான இயற்கைக் காட்சிகள் உன் விழித்திரையை (Retina)ச் சற்று சாந்தப்படுத்தும். விருப்பு, வெறுப்பு, காமம், பொறாமை, பேராசை இவை எங்கும் இருக்கின்றன. மேலும் நீ உன்னுடன் அதே மனதைக் கொண்டு போகிறாய். கற்பனையும் இடமாற்றமும் அனேகம் பேரை ஏமாற்றி இருக்கின்றன! மனிதனே!

திருப்தியோடு இரு. எங்கு இருக்கிறாயோ அங்கேயே வசி. ஆனால் மனதையும் புலன்களையும் சாந்தப்படுத்து. உள்ளிருக்கும் (அந்தர்-ஆன்மா) ஆன்மாவின் மேல் இடைவிடாது தியானம் செய். ஆன்மாவிலே நீ அழியாத அமைதியைக் காண்பாய். இப்பொழுது மனம் உன்னை ஏமாற்றுவதை நிறுத்தும்.

எனக்கு இவ்வுலகம் முழுவதும் ஒரு பெரிய நெருப்புப் பந்து போல் காணப்படுகிறது. எனக்கு இவ்வுலகம் முழுவதும், எல்லா ஜீவராசிகளும் வாட்டி வதக்கப்படும் ஒரு பெரிய உலை போல் காணப்படுகிறது.

நீ சாகும் தறுவாயிலிருக்கும்போது, உன்னுடைய மகனோ, மகளோ, நண்பனோ அல்லது சுற்றத்தாரோ உனக்கு உதவி செய்வார்களா? இவ்வுலகம் முழுவதிலும் உனக்கு ஒரு நேர்மையான - தன்னலமற்ற சிநேகிதன் இருக்கிறானா? எல்லோரும் தன்னல முடையவர்களே. தூய்மையான அன்பு கிடையாது. ஆனால் உன்னுடைய உண்மையான நண்பனும் தந்தையுமாகிய உன் இதயக்குகையில் வசிக்கும் அந்தப் பகவானை நீ மறந்தபோதிலும் அவன் உன்னைக் கைவிடுவதில்லை. கடவுளிலெல்லாம் கடவுளாகிய, தெய்வத்தினுள் எல்லாம் தெய்வமாகிய, பெரியவற்றுள் எல்லாம் பெரியதாகிய அந்தக் கடவுளை மனமார அமைதியாகப் போற்றி வணங்கு. அவன் உன்னை ஆசிர்வதித்துத் தன்னுடைய அன்பையும், ஞானத்தையும், சக்தியையும், சாந்தத்தையும் உனக்கு அருளட்டும்!

இவ்வுலகத்திலுள்ளவை எல்லாம் அநித்திய மானவை (பொய்யானவை, நிலையற்றவை). ஆகையால் அன்பையும் மரியாதையையும் விஷமாகப்

பாவி, அவற்றிடத்து கருத்தில்லாமலிரு. அடக்கமாகவும் மௌனமாகவும் இரு. பிறரோடு சேர்வதை விட்டுவிடு. தனிமையாக வாழ்ந்து உன் இதயத்திலே ஆத்ம ஆனந்தத்தை நுகர்ந்து மகிழ். நீ உன் ஆன்மாவிலே வாழ முடியும்பொழுது, உனக்கு யாருடைய சகவாசமும் தேவையில்லை.

நீ உலகப் பொருள்களிடத்து அதிக வெறுப்புக் கொள்ள வெண்டும். எல்லாப் பொருள்களையும் விஷய போகங்களையும், சாணமாகவும், விஷமாகவும், தூசியாகவும், துச்சமாகவும் எண்ணி நடந்து, மனதை அவற்றிலிருந்து அப்பால் திருப்பு. அதன் பிறகே நீ ஞானத்தை அடைவாய்.

பொய்யான வாழ்க்கையிலுள்ள பற்றை விட்டுவிடு. பயமின்றி இரு. வைராக்கியத்தில் தஞ்சம் புகு. எல்லா பயங்களும் பறந்து சென்று விடும். பகவானுடைய பாதங்களைப் பற்றி நில். பகுக்க முடியாத (ஒன்றான) பார்த்திராத, தெரியாத, தெரிந்துகொள்ளமுடியாத ஆன்மா அல்லது உபநிடதங்களில் கூறியுள்ள பிரம்மனைப் பற்றிக் கொள்.

பகுத்தறிவில்லாமல் மனைவி, குழந்தை, வீடு, செல்வம், பொருள் இவற்றைப் பற்றிக் கொண்டிருப்பதால் நீ உன்னுடைய உண்மைத் தெய்வீகத் தன்மையை முற்றிலும் மறந்துவிட்டாய். மனைவி, குழந்தை, பணம் இவையே உன் கடவுளாகிவிட்டன. ஆனால் உண்மையில் அவை உன்னுடைய விரோதிகள்.

நீ உன் இந்திரியங்களை அடக்கி துன்பம், பாவம், பயம், பற்று, துயரம், வியாதி, முதுமை, இறப்பு

ஆகியவற்றோடு கூடியிருக்கும் பயனற்ற இவ்வுலக இன்பங்களையும் போகங்களையும் வெறுத்து, தீவிர வைராக்கியத்தை வளர்த்தால் இவ்வுலகத்திலுள்ளவை எதுவும் உன்னை மயக்க முடியாது. நீ அழியாத அமைதியையும் எல்லையில்லாத ஆனந்தத்தையும் பெறுவாய். பெண்களிடத்தும் வேறு எந்த உலகப் பொருள்களிடத்தும் உனக்குக் கவர்ச்சியே இருக்காது. பிறகு காமம் உன்னை ஆட்கொள்ள முடியாது.

உண்மையில் உனக்குக் கடவுள் மட்டுமே வேண்டுமானால், இரக்கமின்றி நீ இவ்வுலகத்தை உதறித் தள்ளு. உன்னுடைய ஊயும் காப்பியும் போதும், சோடாவும் லெமனும் போதும். தந்தை, தாய், மகன், மகள், சகோதரன், சகோதரி, பந்துக்கள் இவர்களோடுள்ள சம்பந்தமும் போதும். முற்பிறவிகளில் நீ எண்ணற்ற தந்தை, தாய், மனைவி, குழந்தைகளைப் பெற்றிருந்தாய். நீ தனியாக வந்தாய். நீ தனியாகப் போவாய். உன் வினைகளைத் தவிர வேறு எதுவும் உன்னைப் பின்பற்றமாட்டா. கடவுளை அறி, எல்லாத் துயரங்களும் அற்றுப் போகும்.

பகுத்தறிவின்றி எவன் தன் மனைவி, மகன், மகள், உலகப் பொருள் இவற்றைப் பற்றி நிற்கிறானோ அவனுக்குத் தன் தெய்வீகத் தன்மையை முற்றிலும் மறப்பதைத் தவிர வேறு வழி கிடையாது.

ஒரு சாதகனுக்கு, ஒரு பெண்ணின் சகவாசம் எவ்வளவு கெடுதியோ, அதைவிட அதிகமாக இல்லாவிட்டாலும், அவ்வளவு கெடுதியானது உலகியல் மனமுடையவர்களின் சகவாசம்.

தங்களுக்குக் கொஞ்சம் உணவும், பணமும், ஒரு பெண்ணும் கிடைப்பதால் உலக மக்கள் சந்தோஷமாக இருப்பதாக நினைக்கிறார்கள். ஆனால் அமரத்துவமாகிய அந்த அமிர்தத்தை அவர்கள் கொஞ்சம் பருகுவார்களேயானால், அவர்கள் அடையும் ஆனந்தத்தின் தன்மை எப்பேர்ப்பட்டதாக இருக்க வேண்டும்!

அன்பார்ந்த நண்பனே! இறந்த காலம் உனக்கு இப்பொழுது கனவைப் போல் காணப்படுகிறது. பிறகு, நீ ஏன் இந்த நிகழ்காலமும் சில நாட்களில் கனவைப் போல் தோன்றுமென்று நம்பக் கூடாது?

எல்லா உலக இன்பங்களும் முதலில் அமிர்தம் போல் காணப்படுகின்றன. ஆனால் அவை கடைசியில் கொடிய விஷமாகின்றன.

இவ்வுலகம் இரண்டு நாள்களுக்கு இருக்கும் ஒரு விழா. அதில் இந்த சரீரம் இரண்டு நிமிஷங்களுக்குத் தோற்றமளிக்கிறது. நீ முழு உலகத்திற்கும் ஒப்பற்ற அரசனானாலும் உண்மையான ஆனந்தத்தையும் அமைதியையும் அனுபவிக்க முடியாது.

இந்த பூமியில் மனிதனின் வாழ்க்கை பயத்திற்கும் கடுந்துயரத்திற்கும் உட்பட்டதல்லாமல் வேறொன்றுமில்லை. உண்மையான தீவிர வைராக்கியமும் உறுதியான விவேகமும் பெற்றவர்களை விஷயப் பொருள்களோ, மாரனோ, சாத்தானோ ஒருநாளும் மயக்க முடியாது.

இடைவிடாது மாறிக் கொண்டேயிருக்கும் இவ்வுலகத்தில் அனேகவித நிலைமைகளால் சூழப் பட்டு, பெரிய பாறையின் மேல் மிகச் சிறிய தூசி

ஊசலாடுவது போல் நீ மயக்கத்தில் உழன்று துயரங்களால் கஷ்டப்படுகிறாய். நாம் நன்றாக ஆராய்ந்து பார்க்கும்பொழுது 'காலம்' நிரந்தரத் தன்மையுடையது என்று தெரிய வருகிறது. அதற்குமுன் நம்முடைய நூறு வருட வாழ்க்கையை ஒப்பிடும் பொழுது அது ஒரு கண நேரமே. அப்படி இருக்கையில் நீ ஏன் உன் இந்தச் சிறிய வாழ்க்கையை பெரிதாக எண்ணித் தீராத ஆசைகளுக்குட்பட்டு தளர்ச்சியடைந்து கஷ்டப்படுகிறாய்? உன் தீய மனதால் கெடுக்கப்பட்டு உன்னைப் போல் இழிவான வாழ்க்கை நடத்தக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்? ஒரு கணமும் நிலைத்திராத உன் ஒழுங்கற்ற வாழ்க்கை மிகவும் கேவலமானது.

எண்ணற்ற உலகங்களோடு உன் வாழ்க்கையை ஒப்பிடும்பொழுது, அதை ஓர் அணுவை விடப் பெரியதாக எண்ண முடியாது. துன்பத்தால் நிறைந்த இவ்வுலகத்தை நீ பெரிதாக நினைப்பது மிகவும் ஆச்சரியப்படத்தக்கதே.

மிகப் பெரிய மனிதர்களும் காலப்போக்கில் மிகச் சிறியவர்களாகி விடுவார்கள். எல்லா இன்பங்களும் முற்காலத்தில் இருந்திருக்கின்றன. பெரிய மனிதர்களும் அவர்களுடைய உறவினர்களும் முற்காலத்தில் தோன்றியிருக்கிறார்கள். அப்படியிருக்க இப்பொருள் களின் வாழ்க்கையில் என்ன உறுதி இருக்கிறது? எண்ணற்ற பூலோகங்களும் அதோடு கூடிய அளவில்லாத செல்வமும் ஆட்சியும் அழிந்து மணலோடு மணலாகப் போய்விட்டன. இந்திரனோடும் செல்வத்தோடும் தேவலோகம் மறைந்துவிட்டது. தோன்றி மறைந்துள்ள உலகங்களுக்கும்,

பிரம்மாக்களுக்கும், மனிதர்களுக்கும் ஓர் அளவே கிடையாது. நம் பார்வையிலிருந்து மறைந்து போன வஸ்துகளெல்லாம் எங்கே போயின? உலக வாழ்க்கையில் என்ன நிச்சயமிருக்கிறது? மையிருட் டான இந்தப் பொய்யான மாயையால் சூழப்பட்ட நீண்ட சொப்பனம் போன்ற வாழ்க்கையிலும் சரீரத்திலும் உள்ள ஆசையாலும் பற்றாலும் நீ உன் வாழ்க்கையை இந்தச் சீர்கேடான நிலைமைக்குக் கொண்டு வந்திருக்கிறாய். ஆரம்பத்திலோ, மத்தியிலோ அல்லது முடிவிலோ இவ்வுலகத்தில் ஒரு உபயோகமான வஸ்துகூட கிடையாது. உண்டாக்கப் பட்ட பொருள்கள் எல்லாம் அழிவு என்னும் வர்ணத்தால் பூசப்பட்டில்லையா? தினசரி வாழ்க்கை யில் நீ உடலின் மூலம் அனேக பாவகரமான செயல்களையும், எண்ணற்ற குற்றங்களையும், துன்பகரமான காரியங்களையும் செய்கிறாய்.

இளமையில் நீ அறியாமையில் மூழ்கி இருக்கிறாய்; வயது வந்தபொழுது பெண்களின் வலையில் சிக்குண்டிருக்கிறாய்; முதுமையில் சம்சார பந்தத்தாலும் சக்தியின்மையாலும் புலம்புகிறாய். கடைசியில் நீ இறந்துபோகிறாய். இப்படியாக எப்பொழுதும் ஓய்வு ஒழிவில்லாமலிருந்தால் புண்ணியச் செயல்களைச் செய்வதற்கு உனக்கு நேரம் எங்கே கிடைக்கப் போகிறது. இவ்வுலகத்தில் கோர நடனமாடி விளையாடும் இம்மாயை எப்படி வந்தது? இந்த உலகமாகிய நாடக மேடையின் மேல் உன் மனமாகிய பேய் இந்திரியங்களின் இசைக்கு ஏற்ப ஆடுகிறது. கண் மூடித்திறக்கும் நேரத்தில் அனேக பிரம்மாக்கள் ஆக்கி அழிக்கப்படுவார்களானால் அவர்களுக்கு முன் நுண்ணிய ஜீவனாகிய நீ எந்த மூலைக்கு?

இவ்வுலகத்தையும் உன் மனைவியையும் குழந்தைகளையும் நீ திருப்தி செய்ய முடியாது. 'கிழவன், அவன் மகன், கழுதை' - அந்தக் கதையை நினைவில் வைத்துக் கொள். "தூய்மையான மனிதனைப் பேயாகவும், புத்திசாலியைத் தற்புகழ்ச்சிக்காரனாகவும், பொறுமையுடையவனை வலிமையற்றவனென்றும், வலிமையுள்ளவனைக் கொடியவனென்றும் மறதியுள்ள வனைத் திருடனென்றும், அழகானவனை அருவருப் பானவனென்றும் உலகம் தூற்றுகிறது" என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஒருவன் எல்லா வழிகளிலும் தன்னுடைய நன்மையையே பார்த்துக் கொள்ள வேண்டும். அடக்க முடியாத இவ்வுலகத்தார் வாய் என்ன செய்ய முடியும்?

"ஓ பாண்டவா! எவன் ஒளியையும் வெளிச்செல்லும் சக்தியையும் மயக்கத்தையும் அவை இருக்கும்போது வெறுக்காமலும் இல்லாதபொழுது விரும்பாமலும் இருக்கிறானோ, நடுநிலைமையாக இருந்து பண்புகளால் அசைக்கப்படாமல் 'பண்புகள் உழலுகின்றன' என்று சொல்லி அவற்றிலிருந்து விலகி நின்று, அசைந்து கொடுக்காமல், இன்பத்திலும் துன்பத்திலும் சமமாக இருந்து, தற்சார்போடும் இருக்கிறானோ, எவனுக்கு ஒரு மண்கட்டியும், பெரிய பாறையும், பொன் கட்டியும் சமமாக இருக்கின்றனவோ, விருப்பும் வெறுப்புமுள்ளவற்றிடத்து ஒன்றாகவும், புகழ்ச்சியிலும் இகழ்ச்சியிலும் ஒன்றாகவும், மரியாதையிலும் பழியிலும் ஒன்றாகவும், நண்பர்களிடத்தும் விரோதிகளிடத்தும் ஒரே விதமாகவும், மேற்கொண்ட எல்லா காரியங்களையும் விட்டுவிடுகிறானோ அவனே பண்புகளைக்

கடந்தவன் என்று சொல்லப்படுகிறது. மேலும் எவன் பக்தி யோகத்தின் மூலம் முழு மனதோடு எனக்குச் சேவை செய்கிறானோ அவன் பண்புகளைக் கடந்து சென்று, நிலையான பரம்பொருளாகத் தகுதியானவன்" என்று கீதையில் கிருஷ்ண பகவான் கூறுகிறார். (அத் XIV - 22-26).

இந்த உன்னதமான தெய்வீக நிலையை அடைய, முதலில் நீ ஆன்மீக வாழ்க்கையின் மேன்மையை நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அதன் பிறகே, இவ்வுலகத்தைக் கருணையின்றி வெறுத்து உதைத்துத் தள்ளி, துறவு மார்க்கத்தைப் பின்பற்றி ஆன்மாவின்மேல் தியானம் செய்வதற்கு வேண்டிய சக்தியைப் பெறுவாய். பகவத் கீதையின் கீழ்க்கண்ட சுலோகங்களை இடைவிடாது நினைவில் வைத்துக் கொண்டு தியானம் செய்தால் உன் நோக்கத்தையடைய அது மிகவும் உதவி செய்யும்.

''எவனுடைய ஆன்மா வெளித் தொடர்புகளோடு சம்பந்தமின்றி இருக்கிறதோ, பரமாத்மாவில் ஆனந்தத்தைக் காண்கிறதோ, அவன் அந்தப் பரமாத்வோடு தன் ஆன்மாவை யோகத்தின் மூலம் ஒன்று சேர்த்து அழிவில்லாத ஆனந்தத்தை அனுபவிக்கிறான். (அத் V -21).

''இந்திரியங்களுக்கப்பால் அறிவானது அறியக் கூடிய, அந்தப் பரம்பொருளில் உன்னதமான மகிழ்ச்சியைக் கண்டு, அதில் ஸ்தாபிதம் அடைந்ததும் அவன் அந்த உண்மையிலிருந்து அசைவதில்லை, அதை அடைந்ததும் அதைவிடப் பெரிய லாபம் வேறொன்றுமில்லை என்று அவன் நினைக்கிறான். அதில் நிலை பெற்றதும், எத்தகைய பெரிய

துயரத்தாலும் அவன் அசைக்கப்படுவதில்லை. (அத். VI 21-22).

"இப்படியாக ஆன்மாவை எப்பொழுதும் பரம்பொருளோடு ஒன்றாக இணைத்து பாவங்களை விலக்கிய யோகி, அந்தப் பரம்பொருளோடு அளவில்லாத ஆனந்தச் சேர்க்கையை சுலபமாக அனுபவிக்கிறான்" (அத். VI - 28)

"தெரிந்து கொள்ள வேண்டியது எது என்பதையும், தெரிந்து கொண்டதும் அமரத்துவமும் ஆனந்தமும் அடையப்படுகிறதோ, அந்த ஆதியந்தமில்லாத 'சத்'தும் 'அசத்'துமில்லாத நிலையான பரம்பொருளை நான் இப்பொழுது சொல்லுகிறேன், கேள்"

"எல்லாச் சரீரங்களின் உற்பத்திக்குக் காரணமாகிய முக்குணங்களை, இவ்வுடலில் வசிப்பவன் கடந்த பிறகு இறப்பு, பிறப்பு, முதுமை முதலிய துயரங்களிலிருந்து விடுவிக்கப்பட்டு அவன் அமரத்துவமாகிய அமிர்தத்தைப் பருகுகிறான்" (அத்.XIV-20)

அன்பார்ந்த நண்பர்களே! உங்களுடைய முயற்சிகளைத் தளர்த்தாதீர்கள். தெய்வீகத் தீயைக் குறையாது ஒரே மாதிரியாக எரிய வைத்துக் கொண்டிருங்கள். இப்பொழுது நீ உன் நோக்கத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறாய். ஒளி வந்துவிட்டது. உன் முகத்தில் பிரம்ம தேஜஸ் இருக்கிறது. உன்னுடைய சளைக்காத பொறுமையான சாதனையால் ஆன்மீகப் பாதையிலுள்ள கடக்க முடியாத அனேக மலையுச்சிகளையும் பள்ளத்தாக்குகளையும் நீ கடந்து விட்டாய். உண்மையாகவே இது மிகவும்

மெச்சத்தக்கது. சந்தேகமின்றி போற்றத்தக்க அளவு நீ முன்னேற்றமடைந்திருக்கிறாய் நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஓ யோகீந்தரா! ஆனால் நீ இன்னும் ஒரே ஒரு உச்சியேறி, ஒரே ஒரு குறுகிய பாதை வழியாகச் செல்ல வேண்டும். இதற்கு இன்னும் பொறுமையோடும் வலிமையோடும் கூடிய முயற்சி தேவை. நீ உன்னுடைய சாத்வீக அகங்காரத்தையும் கூட அழிக்க வேண்டும். பிரம்மகார விருத்திகூட அழிய வேண்டும். அதன் பிறகே வாழ்க்கையின் உயர்ந்த நோக்கமாகிய பூமாவை நீ அடைவாய். நீ இதைச் செய்யலாம், எனக்கு முற்றிலும் நம்பிக்கை இருக்கிறது.

**அத்தியாயம் 7**

## வைராக்கிய சதகத்தின் சாரம்

வைராக்கிய சதகம் அல்லது பத்ருஹரியாரின் நூறு துறவுப் பாடல்கள் சாதாரணமாகப் பத்து தொகுதிகளாகப் பகுக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன:- ஆசையின் கண்டனம்; விஷய வஸ்துகளை விடுவதில் பயனற்ற முயற்சிகள், கெஞ்சிக்கேட்கிற தாழ்மையான மனப்பான்மையின் கண்டனம், இன்பங்களின் நிலையின்மையை விரித்துரைத்தல், காலத்தின் வேலையை விரித்துரைத்தல், ஆண்டியோடு அரசனை ஒப்பிடல், ஞானத்தைத் தூண்டுவதன் மூலம் மனதை அடக்குதல், நிலையற்றவற்றிலிருந்து நிலையான உண்மையைப் பகுத்தறிதல், சிவபெருமானை வழிபடலும், ஆத்மானுபூதியடைந்த துறவியின் நடத்தையும்.

நீ உன்னுடைய பிறப்பு வளர்ப்பின் மதிப்பு, தன் மதிப்பு முதலியவற்றைத் தியாகம் செய்து செல்வத்தை அடைவதற்காக இவ்வுலகத்தையும் வானுலகத்தையும் சுற்றி வந்தாலும் உன்னுடைய முயற்சிகளில் வெற்றி காண மாட்டாய். ஒருவேளை வெற்றி கிடைத்தாலும் உன்னுடைய ஆசைகள் திருப்தி அடைய மாட்டா. ஓ இழிவான மனிதனே! இந்த உடலைச் சிறு துணியால் மறைப்பதற்கும் உன் வயிற்றுக் குழியை நிறைப்பதற்கும் நீ என்னென்ன கோரமான குற்றங்களையும் பாவங்களையும் செய்கிறாய்?

அவா ஓடும் ஓர் ஆறு. ஆசைகள் அதனுடைய தண்ணீர். விருப்பங்கள் அதனுடைய அலைகள். பொருள்களிடத்திலுள்ள பற்றுகள் அதில் வசிக்கும் இரையாகிய மிருகங்கள். செங்குத்தான கரையை யுடையதாலும், அறியாமையாகிய எண்ணற்ற நீர்ச்சுழல்கள் இருப்பதாலும் ஒருவன் இந்த ஆற்றைக் கடக்க முடியாது. தூய்மையான மனமுடைய யோகிகளே இந்த ஆற்றைக் கடந்து உயர்ந்த ஆனந்தத்தை அனுபவிக்க முடியும்.

இவ்வுலகத்திலுள்ள எல்லா இன்பம் ஈட்டும் பொருள்களும் அழியும் தன்மையுடையன என்றும் என்றைக்காவது ஒரு நாள் அவை உன்னை விட்டு விலகுமென்றும் நன்றாகத் தெரிந்திருக்கும்போது, அவற்றை நீயாகவே இப்பொழுது துறந்துவிட்டு ஏன் நிரந்தர ஆனந்தத்தை அனுபவிக்கக் கூடாது?

பிரம்ம ஞானத்தால் ஏற்படும் பகுத்தறிவுள்ள ஒருவன், தனக்கு இதுவரை இன்பத்தைக் கொடுத்து வந்த செல்வத்தை முற்றிலும் புறக்கணிப்பதைக் காட்டிலும் வேறு செய்யக் கூடிய அதிசயச் செயல் ஒன்றும் கிடையாது!

மலைக் குகைகளில் வசித்து மேலான ஒளி (கடவுள்)யின் மேல் தியானம் செய்யும் துறவிகளின் வாழ்க்கையே உண்மையில் உன்னதமானது; அது மாளிகைகளில் வாழ்ந்து விஷய போகத்திலும் வீண் கற்பனையிலும் காலத்தைக் கழிக்கும் மனிதர்களுடைய தல்ல. பிச்சையில் கிடைத்ததை உண்டு வெறும் தரையில் படுத்துத் தன்னம்பிக்கையோடும், ஆயிரம் ஒட்டுகளாலாகிய ஒரு கம்பளத்தோடும் வசிக்கும் ஒரு துறவியின் வாழ்க்கையே மிகவும் உயர்ந்ததும்

உன்னதமானதுமாகும்; அது அறுசுவை உண்டியோடு அழகான படுக்கையில் உறங்கி, விலையுயர்ந்த ஆடைகளையணியும் மனிதர்களுடையதல்ல.

அறியாமை காரணமாக நன்றாக எரியும் தீயில் பூச்சிகள் விழுகின்றன. கொக்கியில் மாட்டப் பட்டிருக்கும் இரையை மீன்கள் பிடிக்கின்றன. ஆனால் பகுத்தறிவும், நல்லது கெட்டது என்று தெரிந்துகொள்ளக் கூடிய அறிவும் பெற்றுள்ள மனிதன், அனேக வித தோஷங்களோடு கூடிய விஷய போகத்தைத் துறப்பதில்லை. மயக்கத்திற்குத் தான் என்ன புரிந்து கொள்ள முடியாத சக்தி!

உயர்ந்த கட்டிடங்களும், கற்றறிந்த பிள்ளைகளும், கட்டிகட்டியாகப் பொன்னும், அழகிய இளம் மனைவியும், நல்ல உடல் நலமும் பெற்றிருப்பதுதான் உண்மையான உயர்வு என்று நினைப்பவர்கள் அறிவிலிகள். ஏனெனில் அவர்கள் மயங்கி, இவ்வுலகாகிய சிறைச்சாலைக்குள் புகுவார்கள். ஆனால் அழியும் தன்மையுடையதால் இவ்வுல கத்தையும் அதோடு அதன் இன்பத்தையும் சந்தோஷத் தையும் துறப்பவனே உண்மையாக உயர்ந்தவன்.

மனிதர்கள் செல்வம், மாது, குடி இவற்றை வெட்கமில்லாமல் மிக்க ஆவலோடு நாடுகின்றனரே! இமயமலையின் பள்ளத்தாக்குகளும் தெய்வீகமான கங்கைக் கரையும் அழிந்து போய்விட்டனவா என்ன? இந்த மனிதர்கள் உலகியலாகிய சகதியில் உழல்கிறார்களே, ஏன் அந்த மலைக் குகைகளில் கிழங்குகளும் மூலிகைகளும் கிடைப்பதில்லையா அல்லது பழங்களைக் கொடுக்கக் கூடிய மரங்கள் அழிந்து போய்விட்டனவா?

அறிவில்லாத மனிதனே! எழுந்திரு, என்னுடன் வா. இழிவான செல்வந்தர்களுடைய பெயர்களே கேட்கப்படாத ஏகாந்தத்திலுள்ள குகைகளுக்குப் போவோம். கிழங்கு, மூலிகை, காட்டிலுள்ள பழங்கள் முதலியவற்றைத் தின்று உயிர் வாழ்வோம். புத்துயிரளிக்கும் குளிர்ந்த கங்கைத் தண்ணீரைக் குடிப்போம். தரையிலிருக்கும் கொடிகளின் மேலும், மரச்சுள்ளிகளின் மேலும் படுத்து உறங்குவோம். மலைக் குகைகளின் பாறைகளின் மேல் இளைப்பாறுவோம். கருணையே வடிவமான சிவபிரான் மேல் இரவும் பகலும் ஆழ்ந்த தியானம் செய்து திருப்தியோடு அமைதியான வாழ்க்கை நடத்துவோம். நாம் சந்தோஷமாக இருப்போம். பேராசைக்காரர்கள் துயரப்படட்டும். பெரிய மேரு மலைக்குச் சமமான பொன் கிடைத்தாலும் நான் அதை ஏற்றுக் கொள்ள மாட்டேன்.

உலக வாழ்க்கை எப்பொழுதும் பயத்தோடு கூடியிருக்கிறது. ஆனால் துறவே மனிதனை முற்றிலும் பயமின்றி இருக்கச் செய்கிறது.

பிறப்பு, இறப்பாலும், வனப்புள்ள யௌவனம், முதுமையாலும், திருப்தி, பேராசையாலும், தன்னடக்கம், ஆனந்தம், வஞ்சகமான இளம் பெண்களின் கொடிய சூதாலும்; நற்குணம், பொறாமையுள்ளவர்களாலும், மன்னர்கள், துர்மந்திரிகளாலும், சக்தி, நிலையின்மையாலும் அழிக்கப்பட்டு வருகின்றன. உலகத்தில் ஒன்றாலும் அழிக்கப்படாதது எது இருக்கிறது சொல் பார்ப்போம்?

மனிதர்களின் உடல் நலம் அனேகவித உடல் நோய்க்கும் மனோ வேதனைக்கும் உட்பட்டிருக்கிறது.

செல்வம், திருடர்களின் பயத்திற்குக் காரணம். பிறப்பவையெல்லாம் மறுபடியும் மறுபடியும் இறப்பால் கொண்டு செல்லப்படுகின்றன. இன்பங்கள் பறந்து சென்று விடுகின்றன. வாழ்க்கை குறுகியது. அதிலும் இளமையின் இன்பம் ஒருவன் தாகத்தைத் தணித்துக் கொள்ள மிகவும் கொஞ்சமானது. இவ்வுலகம் பொய்யானது. கடவுள் மட்டுமே உண்மையானது. விஷய போகத்திலுள்ள ஆசைகளைத் துறந்து ஆத்ம ஞானத்தை அடை

நீ அசுத்தமான கருப்பையிலிருந்து வந்திருக்கும் போது, இளமையில் மனக் குழப்பத்தாலும் விஷய போகத்தாலும் தீண்டப்பட்டிருக்கும்போது, முதுமையில் ஆசை நிறைந்த பெண்களின் ஏளனத்திற்குட் பட்டிருக்கும் போது, இவ்வுலகத்தில் இன்பம் இருக்கிறது என்று சொல்ல உனக்கு என்ன துணிச்சல்?

முதுமை தன்னை விழுங்க ஒரு கழுகைப் போல் தயாராக இருக்கிறது என்றும், நோய்கள் அனேக விதங்களில் உடலையும் மனதையும் துன்புறுத்துகின்ற என்றும், நாள்கள் வீண் முயற்சிகளில் வீணாக்கப்படுகின்றன என்றும் அவனுக்கு நன்றாகத் தெரிந்திருந்தும்கூட இவைகளை எல்லாம் கவனிக்காமல் மனிதன் பாவகரமான பழிச் செயல்களை எப்பொழுதும்போல் செய்வது எவ்வளவு பரிதாபகரமானது!

நம்பிக்கையிழந்த அற்பனே! இதை நம்பு. இவ்வுலகமும், எல்லாப் போகங்களும், இந்திரிய இன்பமும் அழியக் கூடியவை, நிலையற்றவை. நீ ஏன் இந்த உலக வஸ்துகளில் இன்பத்தை நாடி வீணாக உன் கால்களை உடைத்துக் கொள்கிறாய்? உனக்கு

உண்மையில் சந்தோஷம் வேண்டுமானால் நான் சொல்லும்படிச் செய். மனதை ஸ்திரம் செய். தியானம் செய். அனுபூதி அடை. பிறகு நீ மேலான ஆனந்தத்தை அடைவாய்.

அந்த அழகான நகரங்கள், பெரிய அரசர்கள், அவர்களுடைய சிற்றரசர்கள், கூரிய அறிவுள்ள அமைச்சர்களின் குழுக்கள், சந்திரனைப் போன்ற அழகிய முகங்களை உடைய அந்த மங்கையர்கள், அளவில்லாத செல்வமும் புகழும் பெற்றிருந்த இளவரசர்கள், நிலக்கிழார்கள், ஒருகாலத்தில் கீர்த்தியோடு பரவியிருந்த புகழ்கீதங்கள் - இவையெல்லாம் எங்கே போயின?

மனிதன் அதே விஷய போகங்களை அனுபவிக்க விரும்புவதும், சுவையுள்ள அதே உணவை உண்ண விரும்புவதும், அதே சாராயத்தைக் குடிக்க விரும்புவதும் அதே பெண்ணோடு இன்பம் அனுபவிக்க விரும்புவதும் மறுபடியும் மறுபடியும் அதே பகலையும் இரவையும் கழிப்பதும் எவ்வளவு விசித்திரமானது. இதைவிட விசித்திரமானது இவற்றிடத்து அவனுக்கு இன்னும் வெறுப்பு ஏற்படவில்லை!

மனிதனுடைய வாழ்க்கை மிகவும் குறுகியது - நூறு வருஷங்கள் மட்டுமே. அதில் பாதி தூக்கத்தில் போய்விடுகிறது. மிகுதியில் பாதி குழந்தைப் பருவத்திலும் முதுமையிலும் செலவழிந்து விடுகிறது. நோயிலும், உறவினரின் பிரிவிலும், துன்பத்திலும், பிறருக்குச் சேவை செய்வதிலும் காலம் கழிந்துவிடுகிறது. இவ்வுலகத்தில் ஒரு மனிதனுக்கு என்ன சந்தோஷம் இருக்க முடியும்?

யார் பெரியவன் - அரசனா அல்லது துறவியா? நீ செல்வத்திற்கும் நிலத்திற்கும் அரசனாக இருந்தால், நானும்தான் மேலான ஞானத்திற்கு அரசன். நீ பெரிய புகழுக்கு அரசனாக இருந்தால், என்னுடைய புகழ் உலகத்தின் நான்கு திசைகளிலும் எதிரொலிக்கிறது. கற்றறிந்த எல்லாரும் பொறாமைப்படுகிறார்கள். நீ என்னைப் பொருட்படுத்தாவிட்டால், நானும் உன்னைப் பற்றியும் உன் செல்வத்தைப் பற்றியும் முற்றிலும் அலட்சியமாக இருக்கிறேன். நீ செல்வத்தின் மேல் உன் அரசு சக்தியைப் பயன்படுத்தினால், நானும் சொற்களின் மேல் என் சக்தியை உபயோகிக்கிறேன். நீ போர்க்களத்தில் பெரிய வீரனாக இருந்தால், கர்வமுள்ள வாதாடுபவர்களைத் தாழச் செய்யும் திறமையும் சக்தியும் என்னிடமிருக்கிறது.

அரசனே, அரச உடையில் நீ மிகுதியோடு இருந்தால், நான் மரப்பட்டைகளோடு முற்றிலும் திருப்தியடைகிறேன். எவனுக்கு அளவற்ற ஆசைகள் இருக்கின்றனவோ, அவனே உண்மையான ஏழை. எவன் தனக்கு உள்ளதோடு திருப்தி அடைகிறானோ அவனே உண்மையான செல்வந்தன்.

நாம், இரந்து வந்த ஆகாரத்தைப் புசிப்போம், ஆகாயம் நமது ஆடையாக இருக்கட்டும், பூமி நம்முடைய படுக்கையாக இருக்கட்டும். செல்வத்திற்கும் நமக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது.

பெறுவதற்கரிய நல்ல மேன்மைகளை அடைவதற்காக, நீ கஷ்டப்படுவது என்ன அறியாமை? மனமே, இங்குமங்கும் அலையாதே. அமைதியில் அமர். நடக்க வேண்டியது நடக்கட்டும். நடந்ததைப் பற்றிக்

கவலைப்படாதே. நடக்கப் போவதைப் பற்றியும் திட்டமிடாதே.

மனமே, அமைதியாக இரு. விஷய போகத்துக்கு ஆசைப்படாதே. மயக்கத்தை நீக்கி, தேவதேவனாகிய மிகப் பெரிய யோகியாகிய சிவபிரானிடத்தில் பக்தியை ஏற்படுத்திக் கொள். தெய்வீக நதியாகிய கங்கைக் கரையில் வாழ ஆசைப்படு.

மனமே, அநீதியான அதிர்ஷ்ட தேவதையைப் பற்றி மறுபடி நினைக்காதே. ஆழ்ந்த இடைவிடாத விசாரத்திலும் தியானத்திலும் நீ மூழ்கு.

இறப்பு, பிறப்பு பயமின்றி சிவபிரானிடத்தில் பக்தி இருக்கும்போது, குடும்பத்தில் பற்றும் விஷய போகத்தில் கிளர்ச்சியும் இல்லாதிருக்கும்போது, உலகியல் மக்களால் சுவாசிக்கப்பட்ட காற்று புகாத காட்டில் ஏகாந்தம் இருக்கும்போது - இதைவிட மேலான வாழ்க்கை வேறு என்ன இருக்கிறது?

ஒருவிதக் குற்றமும் இல்லாத, மேலான, எல்லையில்லாத, இறப்பு பிறப்பில்லாத, ஒளிமயமான பிரம்மத்தின் மேல் தியானம் செய்து உயர்ந்த ஞானத்தையும் ஆனந்தத்தையும் அடை.

இவ்வுடல் வியாதியும் முதுமையும் இல்லாமலிருக்கும்போது, இந்திரியங்கள் பாதிக்கப் படாமல் வாழ்க்கை இளமையோடு இருக்கும் போது, அறிவுள்ளவர்கள் தங்களுடைய மேலான நன்மைக்கு எல்லா வழிகளிலும் முயல வேண்டும். ஏனெனில், வீடு பற்றி எரியும்பொழுது கிணறு வெட்டுவது எதற்கும் உபயோகமில்லை.

படைப்பின் ஆரம்பத்திலிருந்து மூன்று உலகங்களின் எல்லா இடங்களிலும் தேடியும் தன் மனமாகிய யானை, விஷய வஸ்துகளாகிய பெண் யானை மீது கொண்டுள்ள ஆழ்ந்த அற்புதமான மோகத்தை அடக்கும் வழியை இது வரையிலும் யாரும் கண்டதோ கேட்டதோ இல்லை.

எல்லாச் சத்தங்களும் அமைதியில் ஒடுங்கியபின் இரவு நேரங்களில் தியானத் தோரணையில் புனித கங்கைக் கரையில் எங்கேயாவது உட்கார்ந்து கொண்டு, கொடூரமான பிறப்பு இறப்பாகிய கடுந்துயர பயத்தை நினைத்து நடுங்கி, "சிவா, சிவா, சிவா" என்று அலறி, மழைபோல் ஆனந்தக் கண்ணீர் வடிக்கும் பேரானந்த நிலையை நாம் எப்பொழுது அடைவோம்?

அமைதியைக் கெடுக்கும் எண்ணங்களில்லாமல் இருந்து, அனேகக் கிழிசல்களை உடைய ஒரு சிறிய கோவணத் துண்டும், பிச்சையில் கிடைத்த உணவு உண்டு, காட்டிலோ மயானத்திலோ உறங்கி, ஒருவிதத் தங்குதடையுமின்றி எங்கு வேண்டுமானாலும் தனியாகத் திரிய பூரண சுதந்திரமும் இருந்து, யோகத்தால் வரும் பேரானந்தத்தில் ஒருவன் உறுதியாக இருப்பானேயாகில், பிறகு இம் மூன்று உலகங்களின் அரசாளும் உரிமையும் என்ன மதிப்பிற்குரியது?

அத்தியாயம் 8

# தெய்வீக ஊக்கமளிக்கும் கதைகள்

## 1. ஓர் இளவரசனின் கதை

வேட்டையாடப் போயிருக்கும்போது ஒரு நாள் ஓர் இளவரசன் கங்கைக் கரையில் அழகிய ஓர் இளவரசியைக் கண்டான். அவ்விளவரசியின் மனம் ஆன்மீக மார்க்கத்தில் ஊன்றியிருந்தது. அவள் அனேக வேதாந்தப் புத்தகங்களை நன்றாகக் கற்றறிந்து தேர்ச்சி பெற்றிருந்தாள். அவள் ஆன்மாவின் மேல் ஆழ்ந்த தியானம் பழகிக் கொண்டிருந்தாள். இளவரசன் அவளை நெருங்கி, தன்னை மணம் புரிந்து கொள்ளும்படிக் கேட்டான். அவள் கண்டிப்பாக மறுத்துவிட்டாள். ஆனால் இளவரசன் அவளை மறுபடியும் மறுபடியும் அனேக விதங்களில் கெஞ்சிக் கேட்டான். "பத்து நாள்களுக்குப் பிறகு என்னுடைய இருப்பிடத்தில் என்னை வந்து பாருங்கள், நான் உங்களை மணம் புரிந்துகொள்கிறேன்" என்று அவள் கடைசியாகச் சொன்னாள். இளவரசனும் ஒரு வேதாந்த மாணவன்தான். ஆனால் அவனுக்கு உண்மையான ஆழ்ந்த வைராக்கியம் இல்லை. தூக்கமின்றி இரவுகளைக் கழித்துவிட்டு, பத்தாம் நாள் காலை அவன் மிகவும் ஆவலோடு இளவரசியின் அரண்மனைக்குச் சென்றான்.

கல்யாண பந்தத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக அந்த இளம் இளவரசி முன்னதாகவே ஓர் ஏற்பாடு செய்திருந்தாள். அவள் பத்து நாள்களுக்குச் சேர்ந்தாற்போல் தினமும் பேதிக்குச்

சாப்பிட்டு, பத்து வெவ்வேறு எனாமல் பாத்திரங்களில் மலத்தைச் சேகரித்து, அவற்றுக்கு ஒன்று முதல் பத்து வரை இலக்கமிட்டு ஒரு பெரிய அறையில் அழகான பட்டுத் துணிகள் போட்டு மூடி வரிசையாக வைத்துவிட்டாள். இப்பொழுது பார்ப்பதற்கு அவள் வெறும் எலும்பும் தோலுமாகக் காணப்பட்டாள். அவள் கண்கள் செருகிக் கிடந்தன. உடம்பில் சக்தியின்றிப் படுக்கையில் படுத்துக் கிடந்தாள்.

இளவரசன் மிகவும் சந்தோஷத்தோடு அவளைச் சந்திக்க வந்தான். இளவரசி படுத்துக் கொண்டிருந்த அறைக்கு, அவனை வேலைக்காரி அழைத்துச் சென்றாள். அவனால் அவளை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. "அந்த அழகிய இளம் மங்கை எங்கே? நான் அன்று சந்தித்த மங்கை இவள் இல்லை" என்று இளவரசன் வேலைக்காரியைக் கேட்டான். "அன்பார்ந்த இளவரசரே, அதே மங்கைதான் நான். என்னுடைய அழகை மிகவும் பத்திரமாக அந்த அறையில் சேகரித்து வைத்திருக்கிறேன். தயவுசெய்து என்னுடன் வந்து அங்கே பத்திரப்படுத்தி வைத்திருக்கும் அழகைப் பாருங்கள். இப்பொழுது என்னுடன் வாருங்கள். நான் அதை உங்களுக்குக் காட்டுகிறேன்" என்று உடனே இளவரசி பதிலளித்தாள். இப்படிச் சொல்லிக் கொண்டே இளவரசனை அந்த அறைக்கு அழைத்துச் சென்று, பட்டுத் துணியை அகற்றி, தன் அழகைப் பார்த்துக் கொள்ளும்படிச் சொன்னாள். மேலும் "இதுதான் என்னுடைய தோல், சதை இவற்றின் அழகு" என்று சொன்னாள். இளவரசன் அப்படியே பிரமித்துப்போய் நின்றுவிட்டான். அவளிடத்தில் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. அவளைத் தன் தாயாகப் பாவித்து

அவள் பாதங்களில் விழுந்து வணங்கி, இளவரசனுக்குரிய தன் ஆடைகளை எறிந்துவிட்டு, காட்டிற்குச் சென்றுவிட்டான். இப்பொழுது அவனுடைய இதயம் தீவிர வைராக்கியத்தால் நிறைந்திருந்தது. ஒரு சாதுவை அடைந்து, அவரிடமிருந்து போதனைகள் பெற்றுக் கொண்டு கடுமையான தியானம் செய்து ஆத்ம ஞானம் பெற்றான்.

## 2. யோகி வேமண்ணாவின் கதை

வேமண்ணா ஆந்திரதேசத்திலுள்ள கோதாவரி ஜில்லாவில் ஒரு சிறிய கிராமத்தில் 1820 இல் பிறந்தார். அவருக்கு ராமண்ணா என்ற சகோதரர் இருந்தார். அவர் மிகவும் சிறியவராக இருக்கும்போதே அவருடைய தாய் தந்தையர் இறந்துவிட்டனர். அவர் பணக்காரக் குடும்பத்தில் பிறந்திருந்தார். சாதியில் அவர் ஒரு ரெட்டி.

வேமண்ணா பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்பட்டார், அவரால் தொடர்ந்து படிக்க முடியவில்லை. கெட்ட சகவாசத்தில் அகப்பட்டு அவர் ஒரு 'ரௌடி' பையனாகிவிட்டார். ஆனால் அவர் மிகவும் அழகாகவும் சுறுசுறுப்பாகவும் இருந்தார். ராமண்ணரும் அவருடைய மனைவி ஜகதீசுவரியும், வேமண்ணரை மிகவும் நேசித்தனர். பதினைந்து வயதிலேயே அவர் ஒழுக்கம் கெட்டவராகி விட்டார். பெண்களுக்காக அவர் அதிகம் பணம் செலவழித்தார். இருந்தும்கூட அவரை அவருடைய சகோதரரும் அவர் மனைவியும் மிகவும் அதிகமாக விரும்பினார்கள்.

ராமண்ணாவும் அவருடைய மனைவியும் வேமண்ணருடைய போக்கைத் திருத்த எண்ணினார்கள். அவருக்கு பணம் கொடுப்பதை நிறுத்திவிட்டார்கள். ஆதலால் வேமண்ணர் இரவில் தன் மைத்துனியின் நகைகளைத் திருடி ஒரு விலை மகளுக்குக் கொடுத்து வந்தார். தன் நகைகள் காணாமற் போவதைக் கண்டு "என்னுடைய நகைகள் எங்கே" என்று அவள் வேமண்ணரைக் கேட்டாள். ''நீங்கள் எனக்குப் பணம் கொடுக்காததால் நான் அவற்றை எடுத்து என் பிரியைக்குக் கொடுத்துவிட்டேன்" என்று வேமண்ணர் பதிலளித்தார். அவள் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. தன் நகைகள் காணாமற் போனதைப் பற்றி அவள் தன் கணவனுக்குக்கூட தெரியப்படுத்தவில்லை. அவள் வேமண்ணரை மிகவும் நேசித்தாள். அவள் தன்னுடைய நகைகளைப் பத்திரமாகப் பூட்டி வைத்துவிட்டாள்.

அந்த விலைமகள் மேலும் பணமோ நகைகளோ கொண்டுவரும்படி வேமண்ணரைத் தூண்டினாள். எனவே அவர் மறுபடியும் நடுஇரவில் தன் படுக்கையிலிருந்து எழுந்து தன் மைத்துனியின் கழுத்திலுள்ள சில நகைகளை எடுக்க முயற்சித்தார். தன் கல்யாணத்தின்பொழுது தன் கணவரால் கழுத்தில் கட்டப்பட்ட பவித்திரமான தாலி மட்டும்தான் அவள் கழுத்தில் இருந்தது. அதை மட்டுமாவது எடுக்க விரும்பினார் வேமண்ணர். அதை எடுக்க முயலும் போது அவள் விழித்துக் கொண்டு, நடு இரவில் தன் படுக்கை அறைக்கு எதற்காக வந்தாய் என்று கேட்டாள். ''என் பிரியை கொஞ்சம் நகைகள் கொண்டு வரச் சொன்னாள். எனவே நகைகளை எடுக்க நான் இங்கே வந்தேன்" என்று மிகவும்

தைரியமாகச் சொன்னார். அவள் வேமண்ணரை உடனே இந்த அறையை விட்டு வெளியேறும்படிச் சொன்னாள். உடனே அவர் அழுது அவளுடைய பாதங்களில் விழுந்தார். ஜகதீஸ்வரி கடவுளைப் பிரார்த்தித்து, அவருக்கு நல்ல புத்தி கொடுத்து நற்குணமுள்ள தூயவனாக்கும்படிக் கேட்டுக் கொண்டாள். பிறகு அவள் சொல்வதைக் கேட்பதாக அவர் உறுதி கூறினார். அவ்விதமாகச் செய்வதாகவும் அவர் ஒப்புக் கொண்டார்.

"வேமண்ணா, அந்தப் பெண்ணை உனக்கு முன் ஆடையின்றி நிர்வாணமாக நிற்கச் சொல். அவளுடைய பின்புறம் உன்னை நோக்கி இருக்கும்படி நிற்கச் சொல். பிறகு அவளைக் குனிந்து, அவளுடைய தொடைகளின் வழியாகக் கைகளை விட்டு உன் கையில் உள்ள நகைகளை எடுத்துக் கொள்ளச் சொல்" என்று ஜகதீஸ்வரி சொன்னாள். அப்படியே செய்வதாக வாக்குக் கொடுத்துவிட்டு நகைகளை எடுத்துக் கொண்டு வேமண்ணர் விலைமகள் வீட்டிற்குச் சென்றார்.

தன் மைத்துனி கூறியபடியே செய்யும்படி வேமண்ணர் அவ்விலைமகளிடம் சொன்னார். அவள் கீழே குனியும் பொழுது, அவளுடைய இரகசிய உறுப்பு மிகவும் நன்றாகத் தெரிந்தது. உடனே அவர் மனதில் வைராக்கியம் உதித்தது. கைகளில் நகைகளோடு தன் வீட்டிற்குத் திரும்பி வந்து நடந்தவற்றையெல்லாம் தன் மைத்துனிக்குக் கூறினார். "என் அன்பார்ந்த மைத்துனியே, தங்களுடைய அன்பான நடத்தைக்கு மிகவும் நன்றி. இப்பொழுது நான் முற்றிலும் மாறுபட்ட ஒரு மனிதன். இந்த

உலகத்தில் உண்மையான இன்பமே கிடையாது. இவையெல்லாம் மாயையின் மருட்சி. நான் இப்பொழுது உண்மையான இன்பத்தை நாடிச் செல்கிறேன்" என்று சொன்னார். அப்பொழுதே வீட்டைவிட்டுச் சென்று அந்தக் கிராமத்துக்குப் பக்கத்திலுள்ள ஒரு காளி கோயிலுக்குச் சென்று காளியின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டார்.

அந்தக் காளியிடம் சில வருஷங்களாக அபிராமய்யா என்பவர் காளியின் தரிசனத்திற்காக வேண்டிக் கொண்டிருந்தார். ஒரு நாள் அந்தக் காளி அவனுடைய கனவில் தோன்றி "நாளை நடு இரவில் வா. நான் உனக்கு தரிசனம் தருகிறேன்" என்று சொன்னாள். ஆனால் அந்த பாக்கியமற்ற பக்தனால் மறுநாள் வர முடியவில்லை. காளி வந்தபொழுது வேமண்ணா அங்கே இருந்தார். தன்னிடமிருந்து ஒரு வரம் கேட்கும்படி காளி வேமண்ணரிடம் சொன்னாள். "ஓ, தாயே! எனக்கு பிரம்மஞானம் கொடு" என்று வேமண்ணர் கேட்டார். பிறகு காளி அவருக்குத் தீட்சை கொடுத்து, ஞானத்தின் இரகசியத்தைச் சொன்னாள். அன்றையிலிருந்து வேமண்ணர் அதிக பக்தி, ஞானம், யோக சித்தி முதலியவை பெற்று மிகவும் தூயவரானார்.

ஊர் ஊராகச் சுற்றிவரும்பொழுது அவர் கடப்பைக்குச் சென்றார். கடப்பைக்கு அருகிலுள்ள ஒரு காட்டில் வசித்தார். கக்கரி, முலாம் முதலிய பலவித பழ மரங்களை நட்டார். கக்கரிக் காய்கள் எல்லாம் பொன்னால் நிரப்பப்பட்டிருந்தன. இந்தப் பொன்னைக் கொண்டு வேமண்ணர் ஸ்ரீசைலத்தில் ஒரு பொற்கோயில் கட்டினார். இன்றைக்குக்கூட அந்தப்

பொற்கோயிலில் மல்லிகார்ஜுனனின் பிரசித்தி பெற்ற ஜோதிர்லிங்கம் இருக்கிறது. அது யாத்திரைக்கு மிகவும் பிரசித்தி பெற்ற ஓர் தலம். ஒரு நாள், பொன்னால் நிறைந்த கக்கரிக் காய்களைத் திருடத் திருடர்கள் வந்தார்கள். வேமண்ணரின் யோக சக்தியால் அவர்கள் எல்லோரும் சுய அறிவு இல்லாமற் போய்விட்டார்கள்.

வேமண்ணர் ஒரு முறை ஒரு பிராமணரின் குடிசையில் நள்ளிரவில் புகுந்து அவருடைய படுக்கையில் தூங்கிக் கொண்டிருந்தார். அப்படுக் கையிலேயே மலஜலம் கழித்துவிட்டார். மலஜலத்தால் அசுத்தம் செய்யப்பட்ட படுக்கையின் அந்தப் பாகம் மட்டும் பொன்னாக மாறிவிட்டது.

வேமண்ணர் தன் பூத உடலை 1865இல் நீத்தார். அவர் தெலுங்கில் யோகத்தைப் பற்றி அனேக புத்தகங்கள் எழுதியுள்ளார். அவற்றுள் மிகவும் முக்கியமானவை வேமண்ண தத்வ ஞானமும், வேமண்ண ஜீவாம்ருதமும் ஆகும்.

## 8. ஒரு வேலையாளின் கதை

இந்திரபுரத்து அரசனாகிய நரேந்திரசிங் பகதூர்க்கு ஹீரா சிங் என்னும் பெயருடைய ஒரு வேலையாள் இருந்தான். ராஜாவின் கஜானாவை உடைத்து அதிலுள்ள பொருள்களையும் ஆபரணங்களையும் திருட வேண்டுமென்று அவன் தீர்மானித்தான். அதன்படி ஒருநாள் நள்ளிரவில் கஜானாவிற்குப் போகும் வழியில் அரசனுடைய படுக்கையறையில் புகுந்தான். அப்பொழுது ராஜாவும் ராணியும் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்க நேர்ந்தது. "நம்முடைய

மகள் சுரத்குமாரிக்கு எப்பொழுது மணம் செய்விக்கப் போகிறீர்கள். அவளுக்கு வயதாகிவிட்டது? இனிமேல் கல்யாணத்தைத் தள்ளிப் போட முடியாது" என்று ராணி லலிதகுமாரி அரசனிடம் சொன்னாள். ''இரண்டு வருஷங்களாக என்னால் முடிந்தவரை, நான் முயற்சி செய்து கொண்டு தான் இருக்கிறேன். ஆனால் அவளுக்குத் தகுந்தவனாக ஒருவனும் கிடைக்கவில்லை" என்று பதிலளித்தான், அரசன். ஆனால் ராணி இதை ஒப்புக் கொள்ள மறுத்து தன் விருப்பத்திற்கு இணங்கும்படி மறுபடி மறுபடி கட்டாயப்படுத்தினாள். கடைசியாக, ''லலிதா, நாளை காலை பக்கத்திலுள்ள காட்டில் சந்திக்கும் முதல் யோகிக்கு நம் சுரத்தைக் கல்யாணம் செய்து கொடுத்து ராஜ்யத்தில் பாதியையும் கொடுப்பேன்" என்று கூறினான்.

''ஏன் இந்தத் துணிகரமான முயற்சி? நான் அகப்பட்டுக் கொண்டால், கடுமையாகத் தண்டிக்கப்படுவேன். காட்டில் போய் யோகி போல் உட்காரலாம். சுரத்தையும் பாதி ராஜ்யத்தையும் மிகவும் சுலபமாக அடையலாம்" என்று இதுவரையில் மறைந்திருந்து எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த ஹீரா சிங் தனக்குள்ளே நினைத்தான். உடனே அவன் யோகி போல் வேஷம் தரித்துக் கொண்டு காட்டிற்குச் சென்று கண்களை மூடிக் கொண்டு பத்மாசனத்தில் சமாதியில் உட்கார்ந்து கொண்டான். அவன் தன் உடலைக் கொஞ்சம்கூட அசைக்கவில்லை. மறு நாள் காலையில் அரசன் காட்டிற்குச் சென்றான். கடைசியில் இந்த யோகி உட்கார்ந்திருந்த இடத்திற்கு வந்தான். அங்கே அவன் அதிக நேரம் காத்துக் கொண்டிருந்தான். யோகி தன் கண்களைத் திறக்கவேயில்லை. பார்ப்பவர்களுக்கு, தான் சமாதியில்

மூழ்கி இருப்பது போன்ற ஒரு காட்சியளித்தான். ஒரு மணி நேரம் கழிந்த பின் அவன் கண்களைத் திறந்தான். உடனே அரசன் அவன் கால்களில் விழுந்து நமஸ்கரித்துத் தன் அரண்மனைக்கு விஜயம் செய்யும்படி வேண்டிக் கொண்டான். கடைசியாக அரண்மனைக்கு வருவதாக யோகி ஒப்புக் கொண்டான்.

அரசன் யோகியைத் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று சிம்மாசனத்தில் உட்கார வைத்து அவருடைய பாதங்களை அலம்பினான். பிறகு அரசன் சாமரம் வீசினான். "பெரிய யோகியே, புண்ணிய ஆத்மாவே, எங்களிடத்தில் ஓர் அழகிய பெண் இருக்கிறாள். தயவுசெய்து தாங்கள் அவளை மணம்புரிந்துகொண்டு பாதி ராஜ்யத்தையும் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று மிகவும் வினயமாக யோகியை அரசன் வேண்டிக் கொண்டான். இப்பொழுது அந்த யோகிக்கு உண்மையான விவேகம் அல்லது பகுத்தறிவு பிறந்தது. "யோகியின் உடை தரித்துக் கொண்டிருப்பதால் இந்த அரசனாலும் இராணியாலும் நான் மதிக்கப்படுகிறேன். உண்மையாகவே சாத்வீகமான தெய்வீகக் குணங்களோடும், ஆத்ம ஞானத்தோடும் நிஜ சாதுவாக இருந்தால், இந்த அரசனால் மட்டும் அல்ல மற்றும் எத்தனையோ அரசர்களாலும் மற்ற எல்லோராலும் எவ்வளவு மதிக்கப்பட்டுப் போற்றப்படுவேன். இதைப் போன்ற எத்தனை இளவரசிகளும் ராஜ்யங்களும் எனக்குக் கிடைக்கும்?" என்று யோகியாக பொய் வேஷம் தரித்துக் கொண்டிருந்த ஹீரா சிங் மிகவும் உணர்ந்து ஆழ்ந்து யோசிக்கத் தொடங்கினான். உடனே மாறிய மனதோடு அந்த சிம்மாசனத்திலிருந்து இறங்கி

அரண்மனையை விட்டு வெளியேறினான். அவனுக்கு இப்பொழுது கடவுளின் அருள் கிடைத்தது. அவன் இதயத்தில் பகுத்தறிவால் பிறந்த தீவிர வைராக்கியம் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. அவன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகியது. உடலிலுள்ள ரோமங்கள் சிலிர்த்தன. இப்பொழுது உலகத்திலுள்ள எந்த விஷய வஸ்துவும் அவனை மயக்க முடியாது. உலகத்தில் ஏற்பட்ட தீவிர வெறுப்போடு அவன் மறுபடியும் அடர்ந்த காட்டிற்குச் சென்று இடைவிடாது தீவிர தியானம் செய்து ஆத்மானுபூதி அடைந்தான்.

## 4. பகவான் புத்தரின் கதை

சற்றேறக் குறைய 2500 ஆண்டுகளுக்கு முன் வட இந்தியாவில் சுத்தோதனர் என்ற ஓர் அரசன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு மிகவும் அழகிய கௌதமன் என்ற ஒரு நேர்த்தியான மகன் இருந்தான். கௌதமர் பதினாறு வயதில் யசோதரா என்னும் அழகிய மனைவியை மணம் செய்து கொண்டு ராகுல் என்னும் சிறிய மகனையும் பெற்றிருந்தார். அரச குமாரனுக்குரிய எல்லா சந்தோஷங்களோடும் பகட்டோடும் அவர் ஒரு நேர்த்தியான அரண்மனையில் வாழ்ந்து வந்தார்.

பதினாறு வயதிலிருந்து இருபத்தொன்பது வயது வரை ஒரு குடும்ப வாழ்க்கையை நடத்தினார் என்பதைத் தவிர, பிற்காலத்தில் ஆன்மீக உலக வான வெளியில் ஒரு மிகப் பெரிய நட்சத்திரமாக விளங்கப் போகும் கௌதமருடைய முற்கால வாழ்க்கையைப் பற்றி வேறு எதுவும் சொல்ல முடியாது.

சித்தார்த்தர் என்று அழைக்கப்பட்ட இளவரசர் கௌதமர், எப்பொழுதும் அறிவும் சிந்தனையும் உள்ளவராக இருந்தார். பேச்சில் பணிவும், அன்புள்ள இதயமும், எல்லா உயிர்களிடத்தும் கருணையும் நிறைந்துள்ள கௌதமர், ஒரு நாள் காலையில் தன் தகப்பனாருடன் குதிரை சவாரி செய்து கொண்டு செல்லுகையில் மிகவும் மகிழ்ச்சியும் சந்தோஷமும் அடைந்தார். ஆனால் அடுத்த கணமே முதுகில் புண்ணுள்ள மெலிந்த எருது ஒன்றை குடியானவன் ஒருவன் நன்றாக அடிக்க அது வேதனையும் துயரமும் தாங்காமல் கீழே சுருண்டு விழுவதைக் கண்டார். இன்னும் கொஞ்ச தொலைவு சென்றதும், பசியோடுள்ள ஒரு பெரிய பருந்து, புறா ஒன்றைத் தின்பதைக் கண்டார். அதன் பிறகு மற்றொரு புறா சில ஈக்களைத் தின்பதைக் கண்டார். கௌதமர் துக்கத்தோடு வீடு திரும்பினார்.

சில நாள்களுக்குப் பிறகு கௌதமர் ஒரு கனவு கண்டார். ஒரு மெலிந்த கிழவன் நடக்கவும் நிற்கவும் முடியாமல் முதுமையால் தளர்ச்சியடைந்து புலம்புவதைக் கண்டார். "ஓ கௌதமா, நீயும் இவனைப் போல் முதுமையடைந்து மெலிந்து போவாய்" என்று ஒரு குரல் அவரை நோக்கிச் சொல்லிற்று.

பிறகு ஒரு மனிதன் கொடிய நோயின் வலியைத் தாங்க முடியாமல் அவதிப்பட்டு அலறி அழுவதைக் கண்டார். "ஓ கௌதமா, நீயும் இதைப் போல் நோயுற்று துன்பப்படுவாய்" என்று அந்தக் குரல் அவரை நோக்கிச் சொல்லிற்று. பிறகு மற்றொரு மனிதன் தரையில் இறந்து கிடப்பதைக் கண்டார். "ஓ,

கௌதமா, நீயும் ஒரு நாள் இறந்து போவாய்" என்று மறுபடியும் அக்குரல் கூறிற்று.

இப்பொழுது, கௌதமருக்கு, தெளிந்த வைராக்கியம் உதித்தது. வாழ்க்கையின் அநித்தியம் முழுவதும் அவருக்குத் தெரிந்துவிட்டது. தன் வீடு, மனைவி, குழந்தை, வாழ்க்கையின் இன்பம், சந்தோஷம் எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் காட்டிற்குச் சென்று துறவியாகிவிட்டார். ஏழு வருஷங்களுக்கு அவர் காட்டிலே வசித்து இவ்வுலகத்திலுள்ள துன்பங்கள், பாவங்கள், துயரங்கள் முதலிய எல்லாவற்றையும் அழிக்கும் வழியைக் கண்டுபிடிப்பதிலும் காலத்தால் கட்டுப்பட்ட விஷய வஸ்துகளைவிட மேலான ஒன்றைத் தேடுவதிலும் காலம் கழித்தார்.

இதிலிருந்து சித்தார்த்தரின் துறவுக்குக் காரணம், எல்லா உலக இன்பமும் சந்தோஷமும் நிலையில்லாதவை என்னும் ஆழ்ந்த நம்பிக்கையும், எதனாலும் அசைக்க முடியாத ஆனந்தத்தையும் அமைதியையும் அடைய வேண்டுமென்னும் தீவிர ஆசையுமே என்பது நமக்குத் தெரிய வருகிறது. அவர் இதை முதன்முதலில் தனக்கு மட்டும்தான் நாடினார் என்றாலும், பின்னர் தனக்கு எது ஆனந்தத்தையும் அமைதியையும் கொடுத்ததோ அது எல்லோருக்குமே உபயோகமாக இருக்கும் என்று நம்பினார்.

ஒருநாள் இரவு அவர் போதி மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு தியானம் செய்து கொண்டிருக்கையில் அவருக்கு உண்மை உதயமாயிற்று. மனிதனுடைய வாழ்க்கை துன்பமயமானதென்றும், துன்பத்திற்குக் காரணம்

ஆசை என்றும், எல்லா ஆசைகளையும் அழிப்பதன் மூலம் துன்பத்தை ஒழிக்கலாமென்றும், நேர்மையான எண்ணம், பேச்சு, செய்கைகளால் ஆசையை ஒழிக்கலாமென்றும் அவர் அறிந்து கொண்டார். இந்தப் புண்ணிய தினத்திலிருந்து அவர் புத்தர் அல்லது பேரறிவுடையவர் என்று அழைக்கப்பட்டார்.

இதுவரையில் மிக்க அன்பும் உயர் குணமும் பெற்று வாழ்ந்தவர்களில் புத்தர் ஒருவர். அவர் ஏற்படுத்திய மதத்திற்கு பௌத்த மதம் என்று பெயர். மிருகங்கள், ஊர்ந்து செல்லும் ஜந்துக்கள் உள்பட எல்லா உயிர்களிடத்தும் அன்போடும் நல்லெண்ணத்தோடும் இருக்க வேண்டுமென்றும், பிறரைத் துன்புறுத்துவது பாவம் என்றும் அவர் உலகத்திற்குக் கற்பித்தார். அவரைப் பின்பற்றுவோர் அதிகம் இருந்தனர். இன்றைக்குக்கூட நேர்மையாக நினைப்பவர்கள் எல்லோராலும் பௌத்த மதம் ஒரு பெரிய மதமாகக் கருதப்படுகிறது.

## 5. ராஜா பத்ருஹரியாரின் கதை

ஒரு நாள் ராஜா பத்ருஹரி தன் சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கும்போது ஒரு பெரிய தபஸ்வி அவருடைய தர்பாருக்கு வந்தார். உடனே பத்ருஹரி தன் ஆசனத்திலிருந்து எழுந்து தபஸ்வியின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து அனேக விதங்களில் சேவை செய்ய ஆரம்பித்தார். ராஜாவின் நடத்தையைக் கண்டு மிகவும் சந்தோஷமடைந்து அந்த தபஸ்வி, ஒரு பழத்தை அவருக்குக் கொடுத்தார். "இதைச் சாப்பிடுபவர்கள் அமரத்துவமும் அமைதியும் அடைவார்கள்" என்றார் தபஸ்வி.

ராஜா பத்ருஹரிக்கு மிகவும் அழகிய ஒரு ராணி இருந்தாள். அவர் அவளிடம் அதிக நேசத்தோடு அன்பு செலுத்தி வந்தார். தன் இளம் மனைவியாகிய இராணியைத் தவிர வேறு யாரும் அப்பழத்தைச் சாப்பிட அருகதையுள்ளவர்கள் அல்ல என்று எண்ணி, கடவுளால் அனுப்பப்பட்ட அந்தப் பழத்தை எடுத்துச் சென்று அவளுக்கு கொடுத்தார். ராஜாவின் மனைவியாக இருந்தும், இரதத்தில் தன்னை அடிக்கடி உல்லாசப் பிரயாணத்திற்கு அழைத்துச் செல்லும் சாரதியோடு அந்த இளம் ராணி கள்ளக்காதல் கொண்டிருந்தாள். ஆகையால் அவள் அந்தப் பழத்தைக் கொண்டு போய் அந்த சாரதிக்குக் கொடுத்தாள். ஆனால் அந்த சாரதி ஒரு விலைமகளை மிக அதிகமாக நேசித்து வந்தான். ஆதலால் அவன் அந்தப் பழத்தை அவளுக்குக் கொடுத்தான்.

இப்பொழுது, இந்தப் பழத்தைக் சாப்பிடத் தகுந்தவன் அரசன் பத்ருஹரி மட்டுமே என்று எண்ணி அந்த விலைமகள் தன் கையில் பழத்தோடு அரண்மனைக்குச் சென்று அதை அரசனுக்குச் சமர்ப்பித்தாள். இதைக் கண்டு அரசன் திகைத்துப் போனான். தன் இளம் ராணியின் உடைமையாகிய இந்தப் பழத்தை இந்த விலைமகள் எப்படி அடைய முடியும் என்று அவரால் ஊகிக்க முடியவில்லை.

மிகவும் ஆழ்ந்து ஆராய்ந்து யோசித்த பின் அவரே இந்தப் பிரச்சினையை அறிந்து கொண்டார். இச்சமபவத்திற்கு முன், சாரதியிடத்தில் இளம் ராணி கொண்டுள்ள காதலையறிந்த பத்ருஹரியாரின் சகோதரர், அவள் ஒழுக்கம் தவறியவள் என்றும், அரசனின் சாரதியை இரகசியமாகக் காதலிக்கும் ஒரு

பெண்ணை ராணியாக அரண்மனையில் வைத்துக் கொள்வது அரச குடும்பத்துக்கு அவமானமான தென்றும் பத்ருஹரியாருக்குச் சொன்னார். ஆனால் அந்த இளம் ராணி, தன் மேல் சாட்டிய குற்றங்களெல்லாம் பொய்யென்று அரசனுக்கும் நிரூபித்துக் காட்டி, அவர் சகோதரனை ராஜ்யத்திலிருந்து நீக்கி காட்டிற்கு அனுப்பும்படிச் செய்துவிட்டாள். ஆனால் மேற்கொண்டு முழு விவகாரத்தையும் விசாரித்ததில், தன் தம்பியால் இளம் ராணியின் மேல் சாட்டப்பட்ட குற்றம் உண்மை என்றும், தன்னை மிகவும் நேசித்து அரச குடும்பத்தின் நற்பெயரை மிகவும் மதித்து அதை இகழ்ச்சியினின்றும் அவமதிப்பினின்றும் காப்பாற்றுவதற்காக மிகவும் பாடுபட்ட தன் அன்பார்ந்த சகோதரனை, ஒரு பெண்ணால் தூண்டப்பட்டு காட்டிற்கு அனுப்புமளவு ஒரு இழிவான காரியம் செய்துவிட்டோம் என்று பத்ரு ஹரியார் தீர்மானத்திற்கு வந்தார். உடனே அவருக்கு உண்மையான வைராக்கியம் உதித்தது. இவ்வுலகத்தில் உண்மையில் ஒருவருக்கொருவர் அன்பானவர்கள் யாரும் இல்லை என்று தெரிந்துகொண்டார். தன்னுடைய சொந்த மனைவி, சகோதரன் அல்லது உறவினர் யாருமே உண்மையான அன்பு கொண்டவர்கள் அல்லர். அதற்கு மாறாக அவர்கள் எல்லோரும் உண்மையில் ஒருவனுடைய விரோதிகளே என்றும் நன்றாகத் தெரிந்து கொண்டார். இவ்வுலக இன்பங்களிடத்து அவர் அதிக வெறுப்புக் கொண்டு, உடனே தன் மனைவி, ராஜ்யம் எல்லாவற்றையும் விட்டுவிட்டுத் தவ வாழ்க்கையை மேற்கொள்ள காட்டிற்குச் சென்றார். அனேக வருஷங்கள் மிகவும் ஆழ்ந்த தியானம் செய்து கடைசியில் ஆத்ம

ஞானத்தை அடைந்தார். "பத்ருஹரியின் வைராக்கிய சதகம் அல்லது நூறு வைராக்கியப் பாடல்கள்" என்னும் புத்தகம் ஒன்றை அவர் எழுதியிருக்கிறார். அதை ஒரு முறை படித்தாலே, இவ்வுலக வாழ்க்கையில் உடனே வெறுப்பூட்டி எல்லாவற்றையும் துறக்கச் செய்து ஒருவனை ஏகாந்த தவ வாழ்க்கையை மேற் கொள்ளச் செய்யும்.

## 6. யயாதி கதை

முன்னொரு காலத்தில் யயாதி என்ற அரச சாது ஆயிரம் வருஷ காலம் அரசனுக்குரிய எல்லா இன்பங்களுடனும் வாழ்ந்து வந்தான். முதுமை வர ஆரம்பித்ததும், அவனுக்கு மேலும் அரச போகங்களை அனுபவிக்க வேண்டுமென்ற ஆசை அதிகமாக இருந்ததால், தன் முதுமையை எடுத்துக் கொண்டு அவர்கள் இளமையைக் கொடுக்கும்படியும் ஆயிரம் வருஷங்களுக்குப் பிறகு அவர்களுக்கு இளமையைத் திரும்பிக் கொடுத்து விட்டுத் தன் முதுமையைப் பெற்றுக் கொள்வதாயும் தன் ஒவ்வொரு மகனையும் அவன் கேட்டுக்கொண்டான். அவனுடைய கடைசி மகனான புருவைத் தவிர வேறு யாரும் அவ்விதம் செய்யத் தயாராக இல்லை.

புரு, தன் தந்தை விரும்புவது போல் செய்யத் தான் சித்தமாக இருப்பதாகப் பணிவுடன் சொல்லி அதேபோல் தன் இளமையை அவருக்குக் கொடுத்து விட்டு, அவருடைய முதுமையையும் அதோடு கூடிய சக்தியின்மையையும் பெற்றுக் கொண்டான். தன் புது இளமையில் மிகவும் மகிழ்ச்சி கொண்டு யயாதி மறுபடியும் விஷய போகங்களில் ஈடுபட

ஆரம்பித்தான். தன் அதிக ஆசைகளுக்கேற்ப, தன் சக்திக்குத் தகுந்தவாறு, தர்மத்துக்கு விரோதமின்றி, தனக்கு வேண்டிய அளவு அவன் இன்பம் அனுபவித்தான். அவன் மிகவும் சந்தோஷமாக இருந்தான். ஆனால் ஆயிரம் வருஷங்கள் சீக்கிரம் முடிவுக்கு வந்துவிடுமே என்ற ஒரே ஒரு எண்ணம் மட்டும் அவனைக் கஷ்டப்படுத்திக் கொண்டே இருந்தது.

குறிப்பிட்ட காலம் வந்ததும் அவன் தன் மகன் புருவிடம் வந்து, "அன்பார்ந்த, மகனே, உன்னுடைய இளமையைக் கொண்டு நான் என்னுடைய ஆசைகளுக்கு ஏற்ப, என் சக்திக்குத் தகுந்தவாறு, பருவங்களுக்கு ஏற்றபடி நன்றாக அனுபவித்தேன். ஆனால் ஆசைகள் முடிவு பெறவே இல்லை. மோகத்தினால் அவை திருப்தி அடைவதில்லை. நெய் விடப்படும்பொழுது மேலும் கொழுந்து விட்டெரியும் ஓமத்தீயைப் போல், இன்பம் நுகர நுகர ஆசைகள் அதிகரித்துக் கொண்டே இருக்கின்றன. உலகத்திலுள்ள நெல், கோதுமை, இரத்தினம், மிருகங்கள், பெண்கள் - எல்லாவற்றிற்கும் ஒருவன் ஒப்பற்ற அதிகாரியானாலும் அவற்றால் அவனுக்கு 'போதும்' என்று திருப்தி ஏற்படாது.

ஆகையால் அனுபவிக்க வேண்டுமென்னும் ஆசையை விட்டுவிட வேண்டும். வாழ்க்கை அழியும் பொழுதுகூட அதோடு அழிந்து குறையாத இன்பம் அனுபவிக்க வேண்டுமென்னும் விட்டொழிக்க முடியாத ஆசை, மனிதனுக்கு நாசத்தை விளைவிக்கும் ஒரு கொடிய வியாதி. இந்த ஆசையை விட்டொழிப்பதே உண்மையான ஆனந்தம்.

வாழ்க்கையின் இன்பங்களில் ஆயிரம் வருஷங்களுக்கு என் மனம் பற்றுக் கொண்டிருந்தது. இருந்தும்கூட அவற்றிடத்துள்ள என் ஆசைகள் தணிவதற்குப் பதிலாக நாளுக்கு நாள் அதிகரிக்கின்றன. ஆகையால் அதை நான் விட்டுவிடுவேன். நான் என் மனதை பிரம்மத்தின் மேல் நிலைநிறுத்தி என் எஞ்சிய வாழ்நாள்களைக் காட்டில் குற்றமற்ற மான்களுடன் ஆனந்தமாகக் கழிப்பேன்" என்று சொன்னான். இப்படியாகச் சொல்லி, புருவுக்கு இளமையைத் திரும்பக் கொடுத்து அவனைச் சிம்மாசனத்தில் உட்கார வைத்துவிட்டு, துறவி வாழ்க்கையை நடத்துவதற்காக அவன் காட்டிற்குச் சென்றுவிட்டான்.

அத்தியாயம் 9

## இணைப்பு

## 1. ஸ்ரீ சங்கராச்சாரியரின் ப்ரஷ்னோத்தரி

கேள்வி 1 : யார் உண்மையில் அடிமை?

ப. : விஷய வஸ்துகளில் பற்றுக் கொண்டிருக்கும் ஒருவன்.

கே. 2 : விடுதலை (முக்தி) என்பது எது?

ப. : உலக வஸ்துகளில் பற்றின்மையே

கே. 3 : மிகக் கொடூரமான நரகம் எது?

ப. : உன் சொந்த சரீரமே.

கே. 4 : மோட்சத்துக்கு வழி எது?

ப. : எல்லா ஆசைகளையும் அறவே அழித்தல்.

கே. 5 : நரகத்துக்கு வாயில் எது?

ப : பெண்

கே. 6 : எது மோட்சத்தை அடையச் செய்கிறது?

ப : எல்லா ஜீவராசிகளிடத்தும் அஹிம்சை.

கே. 7 : விரோதிகள் யார்?

ப. : நம் இந்திரியங்களே, அடக்கப்பட்டபோது அவை நம்முடைய சிநேகிதர்கள்.

கே. 8 : யார் உண்மையில் ஏழை?

ப. : அதிக ஆசையுள்ள ஒருவன்.

கே. 9 : செல்வந்தன் யார்?

ப. : திருப்தியுள்ள ஒருவன்

கே. 10 : அமிர்தம் எது?

ப : ஆசையற்ற மகிழ்ச்சி.

கே. 11 : உண்மையான பந்தங்கள் எவை?

ப. : 'என்னுடையது', 'உன்னுடையது' என்னும் அகங்காரமே.

கே. 12 : சாராயத்தைப் போல் போதையூட்டுவது எது?

ப : ஒரு பெண்.

கே. 13 : உண்மையான கபோதி யார்?

ப. : காமத்தால் பீடிக்கப்பட்டிருக்கும் ஒருவன்.

கே. 14 : எல்லாவற்றிலும் கொடிய விஷம் எது?

ப. : எல்லா விஷய போகங்களும்

கே. 15 : என்றைக்கும் துன்பமுறுபவன் யார்?

ப. : உலக இன்பங்களில் பற்றுக் கொண்டிருக்கும் ஒருவன்.

கே. 16 : எல்லோர் அறிவுக்கும் அப்பாற்பட்டது எது?

ப. : பெண்ணின் மனமும் அவளுடைய செய்கைகளும்.

கே 17 : விலங்கு (மிருகம்) யார்?

ப : ஞானமற்ற ஒருவன்

கே. 18 : யாருடைய சகவாசத்தை விலக்க வேண்டும்?

ப : அறிவிலிகள், மட்டமான புத்தியுள்ளவர்கள், கொடியவர்கள், பாவிகள்.

கே. 19 : இழிவுக்குக் காரணம் எது?

ப. : இரத்தல் (பிச்சையெடுத்தல்).

கே. 20 : மேன்மையடைவதற்கு வழி எது?

ப. : என்றைக்குமே இரவாதிருத்தல்.

கே. 21 : உண்மையில் பிறப்பவன் யார்?

ப. : மறுபடியும் பிறப்பு இல்லாத ஒருவனே

கே. 22 : உண்மையில் இறப்பவன் யார்?

ப. : மறுபடியும் இறக்கமாட்டாத ஒருவனே.

கே. 23 : மிகப் பெரிய விரோதி யார்?

ப. : காமம் (ஆசை), கோபம், பொய், பேராசை, பற்று முதலியவை

கே. 24 : (போக) வஸ்துகள் எல்லாவற்றிலும் திருப்தி செய்ய முடியாதது எது?

ப. : ஆசை (காமம்)

கே. 25 : எல்லா துயரங்களுக்கும் காரணம் எது?

ப. : 'நான்', 'எனது' என்னும் அகங்காரம்.

கே. 26 : உண்மையான கொள்ளைக்காரன் யார்?

ப : தீய எண்ணங்கள்

கே. 27 : மிருகம் யார்?

ப. : தன் கடமைகளைச் சரிவரச் செய்யாதவனும் ஆத்ம ஞானம் இல்லாதவனும்.

கே. 28 : மின்னலைப் போல் மறைவது எது?

ப. : செல்வம், யௌவனம், வாழ்க்கை.

கே. 29 : எதை இடைவிடாது நினைக்க வேண்டும்?

ப. : உலகத்தின் பொய்யான தன்மையையும், பிரம்மத்தின் அழியாத தன்மையையும்

கே. 30 : உண்மையான செய்கை எது?

ப. : பகவான் கிருஷ்ணனுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடிய செய்கைகளே.

## ஐ. விவேக - சூடாமணி

1. மிகவும் கஷ்டப்பட்டு மனிதப் பிறவியும் ஆண் சரீரமும், சமய நூல்களின் ஞானமும் பெற்ற ஒருவன் மருட்சி அல்லது மயக்கம் காரணமாக ஆத்மானுபூதிக்கு முயலாவிட்டால், தற்கொலை செய்து கொள்கிறான். ஏனெனில் பொய்யான வஸ்துகளைப் பற்றி நின்று அவன் தனக்கு அழிவை ஏற்படுத்திக் கொள்கிறான்.

2. கிடைப்பதற்கரிய மானிடப் பிறவியும் அதிலும் ஆண் சரீரமும் பெற்றும், வாழ்க்கையின் நோக்கத்தை அடைவதைப் புறக்கணிக்கும் ஒரு மனிதனை விடப் பெரிய முட்டாள் இருக்க முடியுமா?

3. வைராக்கியம் என்பது இந்த சரீரம் முதல் படைப்புக் கடவுளாகிய பிரம்மா வரையுள்ள எல்லாவற்றிலிருந்தும் வரும் நிலையற்ற இன்பங்களின் மேலுள்ள ஆசையை, அவற்றிலுள்ள குற்றங்களையும் குறைபாடுகளையும் கவனித்தோ கேட்டோ அல்லது வேறு எவ்வகையிலாவது முன்னதாகவே, நன்றாகத் தெரிந்துகொண்டு விட்டுவிடுவதாகும்.

4. அறுப்பதற்கு மிகவும் கடினமான பற்றாகிய கெட்டியான கயிற்றால் விஷய வஸ்துகளோடு இறுகக் கட்டப்பட்டுள்ள அறிவிலிகள் அவர்களுடைய சொந்தக் கர்மங்களாகிய தூதர்களால் வலுக்கட்டாயமாக சுவர்க்கம், பூமி, நரகம் - ஆகியவற்றுக்கு இழுத்துச் செல்லப்படுகிறார்கள்.

5. மான், யானை, விட்டில் பூச்சி, மீன், கருந்தேனீ - இவை ஐந்தும் சப்தம் முதலிய ஐந்து இந்திரியங்களில் ஏதாவது ஒன்றால் பந்தப்படுத்தப்பட்டு, தங்கள் அழிவை அடைகின்றன. அப்படியிருக்க எல்லா இந்திரியங்களாலும் சேர்ந்து பந்தப்பட்டிருக்கும் மனிதனைப் பற்றிக் கேட்பானேன்?

6. விஷய வஸ்துகள் நல்ல பாம்பின் விஷத்தைவிட மிகவும் கொடியவை. விஷம் அதைக் குடிப்பவனை மட்டுமே அழிக்கிறது. ஆனால் விஷய வஸ்துகளைக் கண்ணால் பார்த்தால் மட்டும் போதும் அவை ஒருவனைக் கொன்று விடும்.

7. விட்டொழிப்பதற்கு மிகவும் கடினமான விஷய வஸ்துகளிடத்துள்ள பற்றாகிய கொடிய பந்தத்திலிருந்து எவன் முற்றிலும் விடுதலை பெற்றிருக்கிறானோ அவன் மட்டும் முக்திக்குத் தகுதியானவன், வேறு

யாருமில்லை. எல்லாப் புத்தகங்களையும் நன்றாகக் கற்றறிந்திருந்தாலும் பயனில்லை.

8. திடமில்லாத போலி வைராக்கியத்தோடு இந்த சம்சார சாகரத்தைக் கடக்க விரும்பும் சாதகர்கள், விஷய போக ஆசையால் கட்டுப்படுத்தப்பட்டு பலவந்தமாக இழுத்துச் செல்லப்பட்டு நடுவிலே மூழ்கடிக்கப்படுகிறார்கள்.

9. எல்லா ஆசைகளையும் மேலான அல்லது திட வைராக்கியமாகிய வாளால் அறவே வெட்டி வீழ்த்தியவனே சம்சார சாகரத்தை இடையூறின்றிக் கடக்கிறான்.

10. பயங்கரமான விஷய இன்ப மார்க்கத்தில் செல்லும் மூர்க்கனை மரணம் சீக்கிரம் பிடித்துக் கொள்கிறது. ஆனால் தன் ஆன்மீக முன்னேற்றத்தைக் கவனித்துக் கொள்ளும் குருவின் ஆணைப்படி நேர்மையான பாதையில் செல்பவர்களுக்கு அவர்களுடைய அறிவு உதவி செய்து வாழ்க்கையின் நோக்கத்தை அடையச் செய்கிறது - இதுவே உண்மை என்று அறி.

11. உண்மையில் உனக்கு முக்தி பெற வேண்டுமென்னும் ஆசை இருக்குமானால், விஷய வஸ்துக்களை விஷமென்று நினைத்து அவற்றிடத்திலிருந்து வெகு தொலைவு விலகி நில். அமிர்தம் போன்ற திருப்தி, இரக்கம், மன்னித்தல், நேர்மை, சமத்துவம், தன்னடக்கம் ஆகிய இந்த நற்குணங்களை தினசரி வாழ்வில் விருத்தி செய்.

12. ஆரம்பமில்லாத அஞ்ஞானத்திலிருந்து விடுதலை பெற்று முக்தி பெற முயற்சி செய்யாமல்

இன்பத்தை அனுபவிப்பதற்காக எவன் நரி, மீன், கழுகு - இவற்றின் சொந்தப் பொருளாகிய இவ்வுடலுக்கு மிகவும் அன்போடு உணவளிக்கிறானோ, அவன் அதன் மூலம் தற்கொலை செய்து கொள்கிறான்.

13. இவ்வுடலுக்கு உணவூட்டி வளர்ப்பதன் மூலம் ஆத்மானுபூதியடைய விரும்பும் ஒருவன் முதலையை மரத் துண்டென்று தவறாக நினைத்து ஆற்றைக் கடக்கும் ஒருவனுக்குச் சமமாவான்.

14. முக்தியடைய விரும்பும் ஒருவனுக்கு சரீரம் போன்ற வஸ்துகள் மீதுள்ள மயக்கம் கொடிய சாவாகும். அத்தகைய மயக்கங்களிலிருந்து முற்றிலும் விலகியிருக்கும் ஒருவனே முக்திக்குத் தகுதியானவன்.

15. சரீரம், மனைவி, குழந்தை முதலியவற்றின் மேலுள்ள மயக்கத்தை வெல். அவற்றை வென்ற பிறகு, பகவான் விஷ்ணுவின் உன்னதமான நிலையை சாதுக்கள் அடைகிறார்கள்.

16. இந்தச் சரீரம் வெறுக்கப்பட வேண்டும். ஏனெனில் அது தோல், சதை, இரத்தம், நரம்பு, கொழுப்பு, எலும்பு முதலியவற்றால் ஆக்கப்பட்டு அசுத்தங்களால் நிரப்பப்பட்டிருக்கிறது.

17. சாதி, ஆசிரமம் போன்ற அனேக தடைகள் இவ்வுடலுக்கு உண்டு. அது அனேக வியாதிகளுக் குட்பட்டது. அது சில நேரங்களில் போற்றப்பட்டு வணங்கப்படுகிறது. மற்றும் சில நேரங்களில் அது பழிக்கப்பட்டு அவமதிக்கப்படுகிறது.

## 3. ஹேமசூடனின் கதை

வெகு நாள்களுக்கு முன் முக்தசூடன் என்ற ஓர் அரசன் இருந்தான். அவன் தாஸர்னா என்ற நாட்டை ஆண்டு வந்தான். அவனுக்கு ஹேமசூடன், மணிசூடன் என்ற இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் இருவரும் மிகவும் அழகாகவும் நற்குணமுள்ளவர்களாகவும் இருந்தனர். அவர்கள் நல்ல நடத்தையும் ஒழுக்கமும் பெற்றிருந்தார்கள். அவர்கள் எல்லாக் கலைகளிலும் மிகவும் திறமை வாய்ந்தவர்களாயும் இருந்தனர். ஆயுதங்களுடன் வேலையாள்களுடனும் அவர்கள் இருவரும் ஒரு நாள் ஸாஹ்ய மலைக்கு வேட்டையாடச் சென்றார்கள். அனேக புலிகளையும் காட்டு மிருகங்களையும் சுட்டார்கள். திடீரென்று ஒரு பெரிய பயங்கரமான புயல் காற்று அடிக்க ஆரம்பித்தது. எங்கும் ஒரே இருள் மயமாயிற்று. ஒருவன் மற்றொருவனைப் பார்க்கக்கூட முடியவில்லை.

எப்படியோ கஷ்டப்பட்டு ஹேமசூடன், பழ மரங்களால் நிறைந்த ஒரு சாதுவின் குடிசையை அடைந்தான். அவன் அந்த ஆசிரமத்தில் ஒரு மிகவும் அழகிய நங்கையைக் கண்டான். அந்த தனிமையான காட்டில் பயமின்றி ஒரு பெண் இருக்கக் கண்டு அவன் ஆச்சரியப்பட்டான். "நீ யார்? உன் தந்தை யார்? நீ ஏன் இங்கு தனியாக இருக்கிறாய்? இந்த தைரியத்தை நீ எப்படிப் பெற்றாய்?" என்று அவன் அந்தப் பெண்ணைக் கேட்டான். "அரசரே, தங்களுக்கு நல்வரவு! ஆசனத்தில் அமருங்கள். சிறிது இளைப்பாருங்கள், உங்களைப் பார்த்தால் மிகவும் களைப்படைந்திருப்பதாகக் காணப்படுகிறது. தயவு

செய்து இந்தப் பழங்களைச் சாப்பிடுங்கள். நான் என் கதையைத் தெரிவிக்கிறேன்" என்று மிகவும் வினயமாகச் சொல்லி கொஞ்சம் பழங்களைக் கொடுத்தாள். அரசன் அப் பழங்களைத் தின்றுவிட்டு சற்று இளைப்பாறினான்.

பிறகு அந்தப் பெண் சொல்ல ஆரம்பித்தாள் : "அரசரே! என் கதையை மிகவும் கவனத்தோடு உற்றுக் கேளுங்கள். எல்லோராலும் போற்றப்படும், தன்னுடைய தீவிர சாதனையாலும் தவத்தாலும் உலகத்தை வென்று முக்தியை அடைந்த வ்யக்ரபாதர் என்னும் சாதுவின் தெய்வீகக் குழந்தை நான். என்னுடைய பெயர் ஹேமலேகா. ஒப்பற்ற அழகும் வர்ணிக்க முடியாத தேஜஸும் உள்ள வித்யுத்பிரபா என்னும் தெய்வ அணங்கு ஒரு நாள் வானநதிக்கு நீராட வந்தாள். வேங்கா பிரதேசத்து அரசனான லுஹேணா என்பவனும் அங்கே வந்தான். வித்யுத்பிரபாவின் அதிக அழகு லுஹேணனின் மனதைக் கவர்ந்துவிட்டது. அவனுடைய அழகைக் கண்டு தெய்வ அணங்கும் மயங்கிப் போய்விட்டாள். வித்யுத்பிரபாவிடத்தில் தனக்குள்ள அன்பை லுஹேணா தெரியப்படுத்தினான். அவளும் சம்மதித்தாள், அரசன் அவளுடன் சில நாள்கள் கழித்தான். அதன் பிறகு அவன் தன் தலைநகருக்குத் திரும்பினான்.

வித்யுத்பிரபா சில காலத்தில் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தாள். தன் கணவன் கோபிப்பானோ என்று பயந்து அவள் அக்குழந்தையை அங்கேயே விட்டு விட்டுத் தன் இடத்திற்குச் சென்றுவிட்டாள். நான் தான் அக்குழந்தை, தன் தினசரி நீராட்டத்துக்கு

வ்யக்ரபாதர் அவ்வாற்றுக்குச் சென்றார். அவர் என்னைப் பார்த்து, என் மேல் பரிவு கொண்டு ஒரு தாயைப் போல் வளர்த்து வந்தார். நானும் அவரை என் தந்தையாகப் பாவிக்கிறேன். நான் அவருக்கு மிகவும் மரியாதையுடன் சேவை செய்கிறேன். அவருடைய கிருபையால் நான் இங்கு பயமின்றி இருக்கிறேன். இன்னும் சிறிது நேரத்தில் என் தந்தை வருவார். தயவு செய்து கொஞ்ச நேரம் இருங்கள். அவருக்கு மரியாதை செலுத்தி அவருடைய அனுக்கிரகத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று முடித்தாள். அந்த அரசனின் மனதை அறிந்து கொண்ட அந்தப் புத்திசாலிப் பெண், "அரசரே, கவலைப்படாதீர். தங்களுடைய ஆசையை தீர்த்துக் கொள்ளலாம். என் தகப்பனார் தங்கள் ஆசைக்கு ஈடுபடுவார்" என்று மேலும் சொல்லி முடித்தாள்.

உடனே பூஜைக்குப் புஷ்பங்களுடன் சாது வ்யக்ரபாதர் வந்தார். இளவரசன் எழுந்திருந்து சாதுவுக்கு நமஸ்காரம் செய்தான். இளவரசன் தன் பெண்ணுடன் காதல் கொண்டிருக்கிறான் என்று சாது அறிந்து கொண்டார். ஹேமலேகாவை அவ்விளவரசனுக்கு மணம் செய்து கொடுத்தார். இளவரசன் அவளுடன் தன் தலைநகரத்துக்குச் சென்றார். இவர்களைக் கண்டு அவனுடைய தந்தையும் மிகவும் சந்தோஷமடைந்தார். அதிக ஆர்ப்பாட்டங்களோடு மிகவும் விமரிசையாக அரசன் அவர்கள் திருமணத்தைக் கொண்டாடினான்.

இளவரசன் ஹேமலேகாவை மிகவும் அதிகமாக நேசித்தான். அவன் அவளிடம் மிகவும் பற்றுக் கொண்டிருந்தான். ஆனால் அவள் மனம் விஷய

போகங்களில் ஈடுபடாதிருப்பதைக் கண்டான். எனவே ஒரு நாள் அவன் அவளைப் பார்த்து "அன்பார்ந்த ஹேமலேகா, உனக்கு என்ன கவலை? நான் உன்னிடம் மிகவும் அன்பு கொண்டிருக்கிறேன். நீ ஏன் என்னிடம் பதிலுக்கு அன்பு செலுத்தாமலிருக்கிறாய்? உன் மனம் எதிலும் மாறாமல் இருக்கிறது. நீ ஆசையற்று இருக்கிறாய். நீ இத்தகைய மனோ நிலையோடு இருக்கும்போது நான் எப்படி உன்னோடு இன்பம் பெற முடியும்? நீ ஒரு சிலையைப் போல் எப்பொழுதும் கண்களை மூடியபடியே உட்கார்ந்து கொண்டிருக்கிறாய். நீ என்னுடன் சிரித்து விளையாடி ஆனந்தமாக இருப்பதில்லை. தயவுசெய்து உன் மனதில் உள்ளதை என்னிடம் சொல். மறைக்காமல் சொல்" என்றான்.

"அரசரே! கேளுங்கள். அன்பு என்பது எது? வெறுப்பு என்பது எது? இது என் மனதிற்குச் சரியாகப் புரியாததால் நான் எப்பொழுதும் அதைப் பற்றியே யோசித்துக் கொண்டிருக்கிறேன. இது வரையில் நான் ஒரு தீர்மானமான முடிவுக்கு வரவில்லை. இந்த விஷயத்தில் எனக்கு அறிவூட்டுங்கள். நான் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்" என்று அவள் மிகவும் மரியாதையோடு பதிலளித்தாள்.

ஹேமசூடன் சிரித்தபடியே பின்வருமாறு பதிலளித்தான். "பெண்கள் ஒன்றுமறியாத மனமுடையவர்கள் என்பது உண்மை. மிருகங்கள்கூட விருப்பு வெறுப்பு என்னவென்று அறிந்திருக்கின்றன. அவை இன்பப் பொருள்களை விரும்புவதையும், அல்லாதவற்றை வெறுப்பதையும் நாம் காண்கிறோம். அழகு நமக்கு இன்பத்தைக் கொடுக்கிறது.

அருவருப்பானவை நமக்குத் துன்பத்தைக் கொடுக்கிறது. இதற்காக நீ ஏன் தினமும் உன் நேரத்தை வீணாக்குகிறாய்?"

"பெண்களுக்குச் சுயமாக ஆராய்ந்து அறியும் சக்தி இல்லையென்பது உண்மையே. ஆகையால் என்னுடைய சந்தேகங்களைத் தீர்ப்பது உங்களுடைய கடமையல்லவா? என் சந்தேகங்களை நீக்கி எனக்கு அறிவைப் புகட்டினால் நான் தங்களிடம் எப்பொழுதும் மிகவும் பற்றுள்ளவளாக இருப்பேன். இளவரசரே, இன்பமும், துன்பமும் கொடுக்கும் வஸ்துகளிலிருந்து முறையே விருப்பும், வெறுப்பும் அல்லது அன்பும், பகைமையும் ஏற்படுகின்றன என்று சொன்னீர்கள். ஆனால் ஒரே வஸ்து நேரத்துக்கும், இடத்துக்கும், சந்தர்ப்பத்துக்கும் ஏற்ப நமக்கு இன்பத்தையும் துன்பத்தையும் கொடுக்கிறது. இப்பொழுது உங்களுடைய தீர்மானம் என்ன? தயவுசெய்து உங்களுடைய முடிவான விடையைத் தெரிவியுங்கள். குளிர்காலத்தில் நெருப்பு மிகவும் ஆனந்தமாக இருக்கிறது; ஆனால் அதே நெருப்பு வெய்யிற் காலத்தில் மிகவும் கொடியதாக இருக்கிறது. நம்மால் அதனிடத்தில் செல்லவே முடிவதில்லை. அதே நெருப்பு குளிர்ப் பிரதேசங்களில் இன்பத்தையும் உஷ்ணப் பிரதேசங்களில் துன்பத்தையும் கொடுக்கிறது. மேலும் அது அளவுக்குத் தகுந்தவாறு வெவ்வேறு பலன்களைக் கொடுக்கிறது. அதேபோல்தான் செல்வம், மனைவி, மகன், தாய்நாடு முதலியவைகளும் கண்டிப்பாகத் துன்பத்தையும் துயரத்தையும் கொடுக்கின்றன.

உங்களுடைய தந்தை முக்ததூடர், இவ்வளவு செல்வம், மக்கள், மனைவி முதலியவை பெற்றிருந்தும் ஏன் எப்பொழுதும் துயரப்படுகிறார்? மற்றவர்கள் இவையில்லாமலும்கூட மிகவும் சந்தோஷமாக இருக்கிறார்கள். உலக இன்பம், துயரம், கஷ்டம், பயம், கவலை இவற்றோடு கலந்திருக்கிறது. ஆகையால் அதை இன்பம் என்றே சொல்ல முடியாது. துயரம் இரு வகைப்படும் - சொந்தம், அயல் அல்லது உள், வெளி என்பவை. வெளித்துயரம் உடலிலுள்ள கோளாறுகளால் ஏற்படுவது. உட்துயரம் ஆசைகளால் ஏற்படுகிறது. அதற்கு மனதோடு சம்பந்தமுண்டு. இவற்றுள் உள்துயரம் சற்றும் வெல்ல முடியாதது. அதுவே எல்லாக் கஷ்டங்களுக்கும் மூல காரணம்; அல்லது வித்து. உலகம், முழுவதும் அத்தகைய உள்துயரத்தில் மூழ்கி இருக்கிறது. துயரமாகிய மரத்திற்கு ஆதாரம், ஆசையாகிய அழியாத திடமான விதைகளே. இந்திரனும் மற்ற தேவர்களும்கூட ஆசையால் தூண்டப்படுகிறார்கள். அவர்கள் இரவும் பகலும் அதனுடைய ஆணையின்படி நடக்கிறார்கள். ஆசையில்லாவிட்டால் நீங்கள் ஒருவித இன்பத்தையும் அனுபவிக்க முடியாது. இத்தகைய இன்பமும் துன்பமும் புழு, பூச்சி, நாய் இவற்றாலும் அனுபவிக்கப்படுகிறது. மனிதனுடைய இன்பம் இதைவிட மேலானது என்று நினைக்கிறீர்களா? புழு, பூச்சிகளின் இன்பம் மனிதனுடையதைவிட மேலானது. ஏனெனில் அவற்றின் இன்பத்தில் ஆசை கலந்திருப்பதில்லை. அது கலப்பற்றது. ஆனால் மனிதனிடத்தில் சிறிய இன்பம் ஆயிரக்கணக்கான தீராத ஆசைகளுக்கிடையில் காணப்படுகிறது. இதை இன்பம் என்றே சொல்ல முடியாது. தன் மனைவியைத் தழுவுவதன் மூலம்

மனிதன் இன்பம் அடைகிறான். ஆனால் அவள் உறுப்புகளை அதிகம் அழுத்துவதன்மூலம் அவள் கஷ்டம் அடைகிறாள். கேளிக்கைக்குப் பின் அவர்கள் இருவரும் களைப்படைகிறார்கள். அழியும் தன்மையுள்ள இந்த இந்திரிய வஸ்துகளில் என்ன இன்பம் இருக்கிறது. இளவரசரே, தயவுசெய்து எனக்கு விவரமாகச் சொல்லுங்கள். இந்தவிதமான இன்பம் நாய், கழுதை, பன்றி இவற்றாலும் அனுபவிக்கப்படுகிறது. ஆனால் என் உடலின் அழகைக் காண்பதால் நீங்கள் இன்பமாக இருப்பதாகச் சொன்னால், இந்த இன்பம் கனவில் ஒரு பெண்ணைத் தழுவும் இன்பத்தைப் போல் பொய்யான கற்பனை" என்றாள் ஹேமலேகா.

"ஓர் அழகிய இளவரசன் மிகவும் அழகிய ஒரு மனைவியைப் பெற்றிருந்தான். அவன் அவளிடத்தில் மிகவும் அன்பு கொண்டிருந்தான். ஆனால் அவள் அதற்கு மாறாக வேலைக்காரனிடத்தில் நேசம் கொண்டிருந்தாள். அவள் இளவரசனை நேர்மையற்ற வழிகளில் ஏமாற்றி வந்தாள். வேலைக்காரன் சாராயத்தில் மயக்க மருந்தைக் கலந்து இளவரசனுக்குக் கொடுப்பான். பிறகு அவன் ஓர் அருவருப்பான வேலைக்காரியை இளவரசனிடம் அனுப்பிவிடுவான். அவன் இளவரசியுடன் இன்பம் அனுபவிப்பான். "நான் பாக்கியசாலி. இவ்வுலகத்திலேயே மிகவும் அழகான மனைவியை நான் பெற்றிருக்கிறேன்" என்று இளவரசன் மயக்கத்தில் நினைத்துக் கொண்டிருந்தான். இப்படியாக அனேக நாள்கள் கடந்தன. ஒரு நாள் வேலைக்காரன் சாராயத்தில் மயக்க மருந்தைக் கலக்க மறந்துவிட்டான். அன்று இளவரசனும் அதிகம் குடிக்கவில்லை. காமம்

மேலிட்டபொழுது இளவரசன் அருவருப்பான வேலைக்காரியுடன் சேர்ந்தான். அவள் வேலைக்காரி என்று இப்பொழுது அவன் தெரிந்து கொண்டான். தன் அருமையான மனைவி எங்கே என்று அவன் அவளைக் கேட்டான். முதலில் அவள் பேசாமலிருந்து விட்டாள். பிறகு இளவரசன் தன் வாளை எடுத்து உண்மை எல்லாவற்றையும் சொல்லாவிட்டால் கொன்றுவிடுவதாகச் சொல்லி பயமுறுத்தினான். அவள் உடனே எல்லாவற்றையும் சொல்லி, இளவரசனின் அழகிய மனைவி வேலைக்காரனுடன் இருக்கும் இடத்தையும் காண்பித்தாள். "நான் எவ்வளவு முட்டாள். நான் குடியால் என்னை இழிவுபடுத்திக் கொண்டேன். பெண்ணின் மேல் யார் அதிக அன்பு வைக்கிறார்களோ அவர்கள் இழிவை அடைகிறார்கள். பறவை எப்படி ஒரே மரத்தில் நிலைத்திருப்பதில்லையோ அதேபோல் பெண்களும் ஒரே மனிதனிடம் நிலை பெற்றிருப்பதில்லை. அவள் மனம் நிலையில்லாது, மாறக் கூடியது. நான் ஒரு மிருகமாகிவிட்டேன். நான் என்னுடைய விவேகம் அல்லது பகுத்தறியும் சக்தியை இழந்துவிட்டேன். நான் என் மனைவியை என் உயிரைவிட மிகவும் அதிகமாக மதித்தேன். ஒரு பெண்ணிடம் பற்றுக் கொண்டு அவளுக்கு விட்டுக் கொடுக்கும் ஒரு மனிதன் உண்மையில் ஒரு கழுதையே. ஆகாயத்திலுள்ள மேகங்களைப் போல் பெண் நிலையற்றவள். நான் இதுவரையில் பெண்களின் தன்மையை அறியவில்லை. அவளை மிகவும் நேசித்து அவளுடன் நம்பிக்கையோடு இருக்கும் என்னை விட்டு விட்டு அவள் அசுத்தமான வேலைக்காரனிடத்தில் செல்கிறாள். நாடக நடிகையைப் போல் அவள்

என்னிடம் அன்பு செலுத்துவதாகப் பாசாங்கு செய்தாள். நான் ஏமாற்றப்பட்டேன் • அவ்வேலைக் காரனின் உடல் முழுவதும் அசுத்தமாக இருக்கிறது. அவனிடத்தில் அவள் என்ன அழகு காண்கிறாள்?" என்று இளவரசன் சொன்னான். அவ்விளவரசன் எல்லாவற்றிலும் வெறுப்புக் கொண்டு தன் ராஜ்யத்தை விட்டுக் காட்டிற்குப் போய்விட்டான்".

ஹேமலேகா மேலும் தொடர்ந்து சொன்னாள். "ஆகையால், இளவரசரே, அழகு என்பது மனதின் கற்பனையே. அழகு மனதில் உண்டாகிறது. மனதின் எண்ணங்களின் ரூபமே அழகு. நீங்கள் என்னிடம் எவ்விதம் அழகைக் காண்கிறீர்களோ அதேபோல் மற்றவர்கள் அருவருப்பான பெண்களிடம் இதைவிட அதிக அழகைக்கூட காண்கிறார்கள். ஒரு பெண்ணைப் பார்த்ததும் மனமாகிய கண்ணாடியில் அவளுடைய பிம்பம் • ஏற்படுகிறது. இந்த அழகை ஒருவன் எப்பொழுதும் நினைத்தால் உடலின் தூண்டுதலுக்குட்பட்ட பாகங்களில் ஆசை கிளப்பப்படுகிறது. இப்படியாக ஆசை கிளப்பப்பட்ட மனிதன், விஷய போகங்களை அனுபவிக்கிறான். இதற்குக் காரணம் அழகு அல்லது பெண்ணை மனதால் இடைவிடாது நினைப்பதேயாகும். ஆனால் எவனுடைய ஆசை கிளப்பப்படுவதில்லையோ, அவன் மிகவும் அழகிய பெண்ணைத் திரும்பிப் பார்ப்பதுகூட கிடையாது. சிறு பிள்ளைகளும் துறவிகளும் இதைப்பற்றி நினைப்பதே கிடையாது. ஆகையால் அவர்களுக்கு விஷய போகங்களில் ஆசையே ஏற்படுவதில்லை. ஒரு குறிப்பிட்ட பெண்ணின் சகவாசத்தில் இன்பத்தைக் காண்பவர்கள், அவள் மிகவும் அழகாக இருந்தாலும் அல்லது மிகவும்

அருவருப்பாக இருந்தாலும், தங்களுடைய எண்ணங்களுக்கேற்ப, தங்கள் மனதில் அழகை ஏற்படுத்திக் கொள்கிறார்கள். தங்கள் மனதிலுள்ள அழகைப் பற்றிய எண்ணங்களை, பெண்ணில் வெளிப்படுத்துகிறார்கள். அருவருப்பான ஒரு பெண்ணில் அழகை எப்படிக் காண்கிறோம் என்றும், அழகு இல்லாமல் இன்பம் எப்படி இருக்க முடியுமென்றும் கேட்டால், காமமுள்ள ஒரு மனிதன் மயக்கத்தால் கண்ணை இழந்துவிடுகிறான் என்றுதான் நான் சொல்ல முடியும். காமம் கண்ணற்றது. ஒரு காமி மிகவும் அருவருப்பான பெண்ணில் ரம்பையின் அழகைக் காண்கிறான். ஆசையில்லாமல் அழகே இருக்க முடியாது. புளிப்பு, இனிப்பு, கசப்பு இவற்றைப் போல் அழகும் வஸ்துகளில் இயற்கையாகவே இருந்தால் ஏன் அது சிறு பிள்ளைகளிடத்தும் சிறு பெண்களிடத்தும் காணப்படுவதில்லை? ஆகையால் அழகு மனதின் கற்பனையே. அது மனதால் உண்டாக்கப்பட்டதே."

"சதையால் ஆக்கப்பட்டு, இரத்தத்தால் நிரப்பப்பட்டு, நரம்புகளால் கட்டப்பட்டு தோலால் மூடப்பட்ட மயிர்கள் முளைத்த எலும்புக்கூடும், பித்த நீராலும், கோழையாலும் நிறைந்த மலமூத்திரப் பெட்டியுமாகிய, இரத்தத்தாலும் விந்துவாலும் உண்டாக்கப்பட்டு மூத்திரப் பாதையின் வழியாகப் பிறந்த இந்த உடல் அழகானது என்று மக்கள் நினைக்கிறார்கள்! இதில் இன்பத்தைக் காணும் மக்கள், அகத்தத்தில் பிறந்த புழுவைவிட எப்படி உயர்ந்தவர்களாக இருக்க முடியும்? இளவரசரே, என்னுடைய இந்த சரீரம் அழகாக இருப்பதைக் காண்கிறீர்கள். இவ்வுடலை அங்கமங்கமாகப் பிரித்து

ஒவ்வொரு பாகத்தையும் சற்று நன்றாக ஆராய்ந்து பாருங்கள். இன்பமான, இனிமையான ஒவ்வொரு பாகத்தையும் நன்றாகக் கூர்ந்து கவனியுங்கள். நாம் சாப்பிடும் எல்லாப் பொருள்களும் வெறுக்கத்தக்க மலமாக மாற்றப்படுகிறது. இப்படியிருக்கையில் அன்புக்குரியது, இன்பகரமானது, மகிழ்வானது எது?"

ஹேமலேகாவின் அமிர்தம் போன்ற போதனையை ஹேமசூடன் மிகவும் கவனத்தோடும் அக்கறையோடும் கேட்டான். அவன் தீவிர வைராக்கியமும் விவேகமும் பெற்று, எங்கும் வியாபித்துள்ள, தூய்மையான, அழிவில்லாத ஆன்மாவின் மேல் தியானம் செய்து ஜீவன் முக்தனானான். மணிசூடன் தன் சகோதரனிடமிருந்தும், முக்தசூடன் தன் மகனிடமிருந்தும், அவனுடைய மனைவி தன் மருமகளிடமிருந்தும் உண்மையைக் கற்றுக் கொண்டார்கள். மந்திரிகளும், அந்நகரத்திலுள்ள மக்களும் ஞானம் பெற்றார்கள். அந்நகரத்தில் பட்சிகள்கூட ஞானமொழி பேசின. மிருகங்களும் பறவைகளும் உட்பட அந்நகரத்திலுள்ளவர்கள் எல்லோரும் கற்றறிந்து ஞானமுடையவர்களாக இருக்கக் கண்டு, ஞானி வாமதேவரும் மற்றவர்களும் அந்நகரத்தை வித்யாநகரம் அல்லது ஞானநகரம் என்று அழைத்தனர்.

✡ ✡ ✡




## சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| இயற்கை மருத்துவம் | ... 45—00 |
| இதோ! உங்கள் கேள்விக்குப் பதில்! | ... 40—00 |
| மனமும் அதன் இரகசியங்களும் | ... 40—00 |
| மஹாபாரதக் கதைகள் | ... 40—00 |
| இந்த உண்மைகளைச் சிந்தியுங்கள் | ... 40—00 |
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் | ... 30—00 |
| இந்து தர்மம் | ... 30—00 |
| ஆத்ம ஞானம் | ... 30—00 |
| ஹிந்து விரதங்களும் விழாக்களும் | ... 20—00 |
| சிவானந்தர் வாழ்க்கை வரலாறு | ... 20—00 |
| யோக சாரம் | ... 20—00 |
| சிவானந்தரின் நீதிக்கதைகள் | ... 20—00 |
| எண்ணத்தின் ஆற்றல் | ... 20—00 |
| சிவானந்தரின் சித்தி விளையாடல்கள் | ... 20—00 |
| முக்கியமான 20 ஆன்மீகப் போதனைகள் | 15—00 |
| 100 ஆண்டுகள் வாழ்வது எப்படி? | ... 15—00 |
| ஆன்மீக வாழ்க்கையில் புதிய தொடக்கம் | 15—00 |
| குண்டலினி யோகம் | ... 15—00 |
| சிறுவர் சிறுமியர்க்கு தெய்வீக வாழ்க்கை | 15—00 |
| ஜபயோகம் | ... 15—00 |
| பிரம்மச்சரியத்தின் இரகசியம் | ... 15—00 |
| யோக வாசிஷ்டம் | ... 15—00 |
| ஓம் தியானமும் மாண்டூக்கிய உபநிடதமும் | ... 15—00 |
| ஆரம்ப வேதாந்தம் | ... 10—00 |
| பெண்மணிகளுக்குப் பொன்மொழிகள் | ... 10—00 |
| குரு கீதை | ... 10—00 |
| ஒளி சக்தி ஞானம் | ... 10—00 |
| தினசரி தியானம் (சிவானந்தரின் சிந்தனைகள்) | 10—00 |
| உயர்ந்த வாழ்க்கைக்கு வழிகாட்டி | ... 10—00 |
| அன்னை பராசக்தி | ... 10—00 |
| யோகப் பயிற்சி வழிகாட்டி | ... 10—00 |
| பகவத்கீதை | ... 10—00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 6—00 |
| வீட்டு வைத்தியம் | ... 5-00 |